


உ

கடவுடுணை

# திருவுத்தரகோசமங்கைத் தலபுராணம்

---

தருமபுர ஆதீனம்

மாசிலாமணிஞானசம்பந்ததேசிகர்சிஷ்யரருளிச்செய்தது

இஃது

திருக்கைலாசபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துச் சிஷ்யவர்க்கத்துள்ளொருவரும் ஷை ஆதீனவித்வான் ம ா ா ஸ்ரீ இ இராமசுவாமிப்பிள்ளை யவர்கள் மாணாக்கர்களுள் ளொருவரும் இராமநாதபுர சமஸ்தானங் காஷ்க்கீப்பராயிருந்த மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் புத்திரருமான

சுவாமிநாதப்பிள்ளையாற்

பரிசோதிக்கப்பட்டு

---

இராமநாதபுரம் றைட்டர்

முத்துக்கருப்பபிள்ளையவர்கள்

லெக்ஷிமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கலாயிற்று.

விய ஞு தை மீ

இதன் விலை அணா ௪

45/4

# பாயிரம்

no 21

---*---

## வாழ்த்து

வசையறுசுருதி வடித்தாராந்தழும்புமறையவர்வாழ்க வான்பொழிக
வசைமணிமிடற்ற வாணிணைபொலிக வமரருமுநிவருஞ்சிறக்கத்
திசைநெடுஞ்சுவரிற் புகழ்ச்சுதை தீற்றுஞ்செய்யகோனரபதிவளர்க
விசைபடுதரங்க முடுத்தபார்தழைக விடைவலா னடியர்வாழியவே .........(க)

## கடவுள்வணக்கம்

### ஸ்ரீசிதம்பர சபா நடேசர்துதி

பூமேவுமடற்கமலப் பொகுட்டுறையுமந்தணனும் பொலிவிலோங்கித்
தேமேவுபசுந்துளவத் திருமாலுங்காண்பரிய செல்வரோனும்
பாமேவுபதஞ்சலியும் புலிப்பதனுங்கண்டுதினம் பணிந்துபோற்ற
மாமேவுமணிமன்றுணடம்புரிபொற்பதமிறைஞ்சி வழுத்தல்செய்வாம்......(உ)

### சிவகாமசுந்தரி

உலகமுழுதும்பயந்துங் கன்னிமைநீங்கா திறைபாலுவந்துவைகி
யலகிலுயிர்க்கருள்சுரந்து பேரறமெண்ணான்கியற்றி யனைத்துங்காக்குந்
திலகநுதற்செங்கனிவாய் சிவகாமசுந்தரியாந் தேவைச்செம்பொன்
மலையரையன்குலவிளக்கை யிருடரவெமதகத்துள் வைத்துவாழ்வாம் ......(ஙு)

### மங்களநாதர்

ஒருபொருளாய்ப் பலவுருவா யொளியாகி யானந்தவுண்மையாகிக்
கருதரிதாய்த்தெரிவரிதாய்க் காரணகாரியங்கடந்த கருணையாகிப்
பொருவின்மறைக்கொழுந்தாகி யுபநிடதப்பொருளாகிப் புவனிபோற்ற
வருதிருவுத்தரகோசமங்கையர னடிக்கமலம் வணங்கல்செய்வாம் ........(ச)

### மங்களநாயகி

காரோறுகருங்குழலுந் திருநுதலுஞ்சுட்டிலைவேற் கண்ணுங்கஞ்சத்
தாரோறுதிருமார்புங் கரும்புருவத்தடந்தோளுங் கருணைகாட்டி

நீரேறுசடாமவுலிப் பெருமான்றனொருபாக நீங்காதோங்கும்
வாரேறுபூண்முலையாண் மலர்ப்பதமுமென்னாளும் வழுத்தல்செய்வாம் ........(௫)

### கற்பகவிநாயகர்

தளராதபேரன்புத் தளைபிணித்தியோகமெனுந் தறியிற்சேர்த்தி
யுளமாயபெருங்கூடத் தணைத்தெனதென் கவளமளித்துவந்துபோற்றி
வளையாழிமடையுடைந்த தெனக்கடாந் திறந்தொழுகுமதமாருத
துளையார்கைப்பொருப்பை மலைக்கொடிபயந்த கற்பகத்தைத்தொழுதுவாழ்வாம்(௬)

### சுப்பிரமணியர்

வெள்ளிவனாநட்டப்பதெனப் பதம்பெயர்க்குநான்மருப்பு வேழமூர்ந்து
தள்ளருஞ்சீர்விண்ணரசு தலையெடுப்பக்கவிழ்ணர்மாத் தடிந்தவேலோன்
கொள்ளைவரிவண்டலம்புங் குழலெழில் சேர்குறமடந்தைகொங்கைதோயுங்
கள்ளவிழ்தார்ச் செவ்வேடனடிபணிந்து பிறவிவனங்கடத்தல்செய்வாம் .....(௭)

### திருஞானசம்பந்தர்

காரமணிருட்குறும்பு கரந்தொளிப்பவிலங்குதிரைக் கடல்வாய்சூழ்ந்த
பாரடையநீற்றினொளி நிலவெறிப்பப் புகழ்நிலவுபரவாநிற்பச்
சீரளவுந்தமிழ்ப்பதிகத் தின்னமுதம்பொழியுமதிச் செல்வன்வான்றோய்
தாரணியும்பொழில்புடைசூழ் சண்பையர்கோன்பதகமலந் தலைமேற்கொள்வாம்(௮)

### திருநாவுக்கரையர்

தொலையாதபவக்கடல் யாங்கடத்துமெனப் பிறர்க்குணரச் செல்வார்போல
நிலையாதபுறச்சமயக்குறும்ப ரிறுகுறப்பிணித்த நெடுங்கல்லோடு
மலையாடுபெரும்பரவையழுந்தா தக்கன்மிதப்பா யாழிநீந்தித்
தலையாயபொருளுணர்ந்த வாகீசர்மலர்ச் சரணஞ்சரணமாதோ ..................(௯)

### திருநாவலூரர்

அனைத்துலகும்பணிகேட்பத் தனிமுதன்மைபூண்டுறையு மலகில்சோதி
கனைத்திருமுகுரற்றினார்ந்த கவுணசிநோக்கசைந்தடையக் கழிமுப்பெய்தி
யெனக்கிவன்மற்றடியன் விலைக்கலங்காண்மினந்தணிரொன்றீர்த்தாட்கொண்ட
வினைப்பகைஞர்நாவலூர் நாவலர்தாட்டுணை துணையாவேட்டுமென்றே ...........(௰)

## திருவாதவூரர்

தினைசிறந்த நெடுங்குடுமிப்பொலங்கிரியிற் கயலெழுது திருபனேவ
வினைசெல்வாம்பரிகொணர்ந்து வருகெனப்போய்ப் பொருள்கொடுபோய் விழைவினொ
தனைவிளங்கும்பெருந்துறையிற் குருந்துறைமான் மழுக்கரந்ததலைவற்போற்றி [ய்இத்
யுனையிறந்தமெய்ப்பொருள்பெற் றுயர்ந்தோனைத்தாழ்ந்தவனை யுளத்துள் வைப்பாம்(௧௧)

## இந்நூலாசிரியரதுகுரவர்

ஆசில்சிரகச்சமயக் கமலங்கள்வாய்திறப்ப வவிச்சையென்னு
மூசுபேரிருள்கரப்பப் புறச்சமயக்குமுதங்கள் முகங்கள்கூம்பத்
தேசுலாஞ்சிவஞானச் சுடர்பரப்பி யிரவியெனத் திகழுந்தன்மை
மாசிலாமணிஞான சம்பந்தன் பூங்கழல்கள்வணங்கல்செய்வாம் ......................(௧௨)

## அவையடக்கம்

பரம்பரன்வருத்த புராணமூவாறுட் பவுடியோத்தரத்துமுற்பாதத்
தருந்தவர்விழையுங் கேத்திரகண்டத் தணிபிறைச்சடையு மைக்களனுங்
கரங்களோர்நான்கு மணிப்பிரம்புழையுங் கனிச்சியுஞ் சுரிகையும் படைத்து
நிரந்தரங்கயிலை காவல்பூண்டுறையு நெடுந்தகை நந்தியெம்பெருமான் ...............(௧௩)

அன்னவற்பழிச்சி வணங்கியெம்பொறியி னடற்குறும்பெறிசநற்குமாரன்
முன்னைநாள்வினவ நவின்றவாறெடுத்து முழுதுணர்சூதனென்றுரைப்போன்
றன்னிசரிகர்த நைமிசவனத்துச் சவுனகன்முதலியோர் கேட்பப்
பின்னமின்றுரைத்த மங்கலபுரியின் பெருமையென் சிறுமையானுரைக்கேன் ......(௧௪)

மறுவறவிளங்குங்கனகமு மிரும்பு மலர்தலையுலகுபொன்னென்னுஞ்
செறிகதிர்ப்பரிதி யல்லதில்விளக்குந் தீபமுஞ்சுடரொனுமதுபோ
லறிவினிற்பழுத்த முதுமொழிப்புலவோ ராய்ந்தினிதுரைத்த தீந்தமிழும்
பொறியிலேன்விரகின் றுரைத்த புன்றமிழும் புராணமென்றெடுத்துரைப்பதுவே..(௧௫)

## புராணவரலாறு

உவமையில்பரமஞான முணர்ந்திருநந்திமுன்னர்த்
தவமலிசநற்குமாரன் சாற்றுமெம்பெரும முன்னாட்
பவமறுவியாக்கிரபாதன் பதஞ்சலி கதைதொகுத்து
நவில யாங்கேட்டோமின்னும் நவின்றமாதவத்தின்மேலோர் ........................(௧௬)

எத்தலத்திருந்தாருண்மை எழுத்தஞ்சும்பிரணவத்தோ
டெத்தலத்திறைவன்கூறக் கேட்டனரொண்டோளன்ன
லெத்தலத்தவர்க்கு முந்நின் றின்னருள்புரிந்தான்மூற்றுங்
கைத்தலக்கனியிற்காண்போய் கழறுதி விரித்திண்டென்ன ..........................(௰எ)

மணிப்பிரம்பொலிப்ப விண்ணோர் மகுடகோடிகளினேற்றுந்
தணிப்பரும்புகழோனன்னோர் சரிதையிற்பிறவுங்கூட்டி
புணர்த்தியவண்ணமிப்போ துரைப்பல்யானுங்கட்சென்றுப்
பணைத்தெழுமுவப்பாற்குதன் பாங்குறைமுனிவர்க்கோதும் ..........................(௰அ)

வினையகிற்குறடுஞ்சந்தும் வேழவெண்மருப்புமுத்துந்
திரைகரைபுரட்டும்வையைத் தென்கரைமருங்கில்யாரும்
பரவுதிப்பியமாய்த்துய்தாய் பாவங்கள்யாவும்போக்கு
முரைகெழுதலமொன்றுண்டாங் குந்தியிலுதித்தமேலோன் ..........................(௰௯)

தலவிசேடம்

இராசதமாசுதீர்ப்பா னெந்தையுள்ளுவக்குமாறு
பராவருந்தவஞ்செய்தானற் பற்பலாயிரமாண்டேகத்
தராதலக்கிழிநின்றுந் தகுமிராதந்தரப்பேர்
விராயகற்பத்திற்சோதி விட்டொளிரிலிங்கமொன்று ..................................(௨௰)

மூனைத்ததுமறைவலான்முன் முயன்றநற்றவத்தான்மேரு
வளைத்தவிற்றடக்கைவீரன் மற்றதுவெட்டோன்றி
யளித்தனன்சிவஞானத்தோ டயர்வில்சாத்துவிகமெய்திக்
களித்தனனவனுமந்தன் கடிபொழிலுத்தரமூதூர்..................................(௨௧)

வேறு

பிரமபுரமென்றன்றுமதற் பிறங்கிற்றுலகமீக்கூறச்
சாதமுணர்ந்தவியாதனு மச்சாத்துவிகத் தானத்தடைந்து
கணாயில்சுருதிக் கதிகாரியாவான் கடவுள்வருடனா
றரனைவிழைந்துகனிநோற்று னடலேறுயர்த்தோன்மகிழ்கூர்ந்து ..................(௨௨)

வேதமனைத்தும்பொருள்விளங்க விளங்குமறிவுப்பணித்தன்னப்
போதமுனியுங்கனிப்பவளம் பொதுளுமிலந்தைமுதல்வைகி
யோதுமறைகண்முழுதுமுணர்ந் துலவாவுண்மைக்கதிவழங்குந்
நிதிலருண்ஞானமும்பெற்றான் சிவன்முத்தனுயினனால் ..............................(௨௩)

அந்நாட்டொடங்கிநிலவலயத் தவ்வூர்வெதிரிகாரணிய
மென்றுசிறப்ப விளங்கியதா லெதிரில்புலித்தாண்மாமுனியு
முன்னுவினைதீர்பதஞ்சலியு மடன்வந்தவட்சேர்ந்துணர்வுடையோர்
செந்நாத்தழும்புமஞ்செழுத்தின் சித்திவிழைந்துதவம்புரிந்தார்........................(உச)

நிலவுபொழியு முயற்கூடு நிமிர்புன்சடையிற் சுமந்தாடு
முலைவில்கருணைப் பெருமானு முவகைசிறந்து வெளிநின்று
தலைமைபிரியாக் குடிலையொடு தன்பேரெழுத்தைந் தையுமுணர்த்தா
னலைவில்கருத்தர் பெற்றுயர்ந்தா ரவருட்புலித்தாண் மாமுனிவன் ..................(உரு)

வேறு

பின்னலஞ்சடைமுடிப் பிரானைவேண்டின
னென்னதுபெயரினா லிந்தவான்பதி
மன்னியவருள்கென வரதனல்கலா
லந்நகர்வியாக்கிர புரமென்றாயதே ...............................................(உசு)

வேறு

வீதிதொறுமணிமாட மிடைந்தொளிரத் தலப்பெருமை
யோதிலதிசயமிகவுமுளது விழைந்தடைந்தோர்க்குத்
தீதிலருணெறியுணர்த்திச் சித்துருவாய்வைகுதலா
லாதிசிதம்பரமென்று மலர்தலைமாநிலம்புகலும் ....................................(உஎ)

நனைக்கமலந் தவிசிருந்த நான்முகத்தோன் கற்பத்து
மனைத்துலகு மழிபோழ்து மழியாத தந்நகரம்
புனிற்றுமதிக்கண்ணியொடும் பூங்கொன்றைமுடிசூடு
மெனக்கினியானுவந்துறையு மிலிங்கங்கண்யாவையினும்..............................(உஅ)

ஓரிரண்டுபாதாளவாசியா யுறையுமிவற்
றோரிலிங்க மகிலேச முத்தரபாற்காசியிடத்
தோரிலிங்கங்கயிலாயந் தென்றிசைக்கணுளாத்ததலத்
தோரிரண்டுதிருநகரு முயர்கதிவீடளிக்குமால் ......................................(உகூ)

அப்பதிகட்கெஞ்ஞான்று மரிதுவமைமிகையில்லை
மெய்ப்புலவர்புகழ்ந்தேத்தும் வேகவதிவலப்பாலின்

மைப்பிடிதன் கட்டம்பவந மதுராநனிசிறந்தோங்கு
முப்பதியின் றென்பாலின் யோசனையோரிரண்டளவில் ........................ (௩௰)

அறைகடல்சூழ்நிலமடந்தைக் காதாரவிலக்கணமாய்ச்
சிறையளிவீழ்பூம்படப்பைத் திருச்சுழிமாநகர்தோன்றும்
பிறையிலங்குசடைமுடியோன் பிரளயாகேசுரனென்
றுறையுமவணதன்குணபால் யோசனைநான்களவின்கண் ........................ (௩௧)

முந்துநாம்புகன்றுரைத்த முதுபதிமங்கலபுரியென்
றிந்தநாண்மூவுலகு மெடுத்தியம்பவோங்கியது
வந்துளாரனைவோர்க்கு மங்கலமுற்றுந்தருமாற்
பைந்துழாய்விடைக்கொடியோன் பாங்கிருந்தமடக்கொடியும் ........................ (௩௨)

அங்கணர்க்குமங்கலர் ரந் தருளுதலாலெவ்வுயிரு
மங்கலதாவிசியென்று வைகுவளவ்வுழியடைந்து
புங்கவருந்தபோதனராய் பொலிந்த கவுதமன்முதல
துங்கநெறிமுனிவரருந் தொலையாதபத்தியராய் ........................ (௩௩)

முத்திபராயணராகி முத்தலைவேற்படைதிரிக்குங்
கைத்தலனைவழிபட்டுக் கைதொழுதுபிறர்க்கெய்தா
மெய்த்திருஞானம்பெற்றார் வெவ்வினைமானுடர்க்கங்சட்
சித்துருவனுறையிலிங்க தெரிசனமற்றரிதன்றே ........................ (௩௪)

சிற்பரனையோர்போது தெரிசித்தோரவ்வளவி
லற்புதமுத்தியையடைவ ரதசரதம்பரதநவில்
பொற்பதன்சாதையைவினவிற் போகமு முத்தியுமளிக்கும்
பற்பலவாருயிர்கட்கும் பழமறையந்தணிர்கேண்மின் ........................ (௩௫)

சிரந்தையொலி யெழ்முழக்குஞ் செங்கையோன்கதைவினவப்
பரந்தெழுவேட்கையிரதனுற் பாக்கியசாலியரன்றே
வரந்தைவிளைவினைதீர்ப்ப ததிசயநல்குவதனைத்துஞ்
சுரந்தவளம்பொலிதலத்தோர் தொல்கதையாம்புகல்கிற்பாம் ........................ (௩௬)

பாயிரமுற்றிற்று

## முதலாவது வேதமித்திரன் சுவர்க்கமடைந்த வத்தியாயம்

உலங்கெழுதிணிபுயத் துதியர்கோனுறை
நலங்கிளர்கேரள நாட்டில்வாழ்பவன்
குலம்பொலிபிருகுவின் குலத்திற்றோன்றிய
விலங்கசன்மார்பினன் வேதமித்திரன் ........................................ (௧)

விரிதருமறைபுகல் வேள்வியாற்றுதற்
குரிமையிலொருவனை யுறுதிசேர்கலா
னரிதயர்மகவினை யாற்றுவித்தலின்
மரபியல்வைதிக வழிவழீஇயினன் ........................................(௨)

பெருவளையன்னதோர் பிரமராக்கத
வுருவுடையலகையா யுள்ளி னுள்ளமு
மெரிதருவிந்த வெற்பிடையருஞ்சுரத்
தருளிலிகாண்டலு மாவிவ்வுவான் ........................................ (௩)

உழிதருகாலையி னூழ்வயத்தினல்
வழிவருசுருதிநூல் வாதம்வல்லவர்
மொழிதெரிபுராணமெய்ப் பொருளுமுற்றினர்
விழுமியகுணத்தின ரிருவர்வேதியர் ........................................ (௪)

கங்கைநீர்படிந்தது கவர்ந்த காவினர்
பொங்குசீர்வியாக்கிர புரேசன்மாக்கதை
தங்களில்விளம்புபு வருநர்சார்வரும்
வெங்கடத்தலையனை விழியிலேகினர் ........................................(௫)

வெருவருமனத்தராய் விலங்கியாங்கொரு
தருமுதனின்றனர் தளர்ந்துதீப்பசிப்
பருவரலினைப்பினன் பாழிமொய்ம்புடைத்
திருவிலிகண்டுயிர் செகுக்குமிச்சையால் ........................................(௬)

அன்னவர்மருங்குசென் றண்மினனவர்
பன்னுசீர்க்காதைபுன் செவியிற்பாய்தலுந்

தன்னுடனடுங்குபு தணியுந்தீத்தழ
லென்னவோர்கணப்பொழு தெல்லைநின்றனன் ......................

அறந்தருகதைசிறி தங்கட்கேட்டலாற்
றுறந்துமுன்செய்வினைத் துரிசுங்கூற்றினா
மறம்புரியலகையின் வடிவுநீத்தனன்
பிறங்கொளிவிளங்குதே வுருவம்பெற்றனன் ........................................(அ)

ஒல்லைதன்குலத்திய லுணர்வுமேயினான்
கொல்விகல்விடையுடைக் குழகன்மான்மியச்
சொல்லமுதினைச்செவித் துணைகொடுண்டன
னல்லறீர்ந்தனையவ ரடிவணங்கினான் ..................................................(௯)

சிற்றிலைவன்னியின் முதலிற்றீவினை
யற்றவன்கன்னலொன் றளவைநின்றனன்
மற்றவற்பார்த்தலு மறைவல்லாளர்க
ளுற்றனரற்புதம் பயமுமுற்றுளார் ....................................................(௰)

பிறையெயிற்றழல்விழிப் பிரம ராக்கதத்
திறலுடைவடிவமெத் தீங்கினெய்தினை
நிறையொளியுருவமீண் டியாதினேர்ந்தனை
முறைமையினடங்கலு மொழிதி நீயென ..........................................(௰௧)

சேரனாட்டினேன் கிளைமுந்நூலணி
யாரணர்குலத்துளே னாதிவேதமு
நேரகல்சாத்திர நிலையுமோர்ந்துளேன்
பாரகத்தருமகம் பலசெய்விப்பனால் .......................................... (௰௨)

யாகநல்வினைத்திறத் தியலுநிட்டையென்
பாகவூழ்வலியினாற் பசும்பொன்வேட்கையா
லாகியாதொருமுறை யுணர்வுமாழ்கினே
னாகையால்வேத சாத்திரமொன்றாய்கிலான் ..........................................(௰௩)

விப்பிரனொருவனை வேட்பித்தேனவ
னொப்பருவேள்விமுற் றியபிறெய்யென
வப்பெருங்கிருதவி னழல்விடுத்தனன்
மைப்படுசிந்தையான் வறிதிருந்தனன் .................................................(௧௪)

அந்தவல்வினைதொடர்ந் தங்கணீத்தனு
நைந்தழீயிடும்பைசெய் நரகம்பற்பல
முந்தனுபவித்தனன் முடிவிலெய்தினேன்
வெந்திறலலகையின் மெய்யைமெய்யிலேன்.................................................(௧௫)

ஒருபதினுயிர மாண்டுழன்றனன்
மருவினன்விந்திய வநத்தினித்தலைப்
பருகுதண்புனலுமுண் பதமும்பெற்றிலேன்
திருகுவெஞ்சினத்தொடு வேட்கைதீர்ந்திலேன்.................................................(௧௬)

இத்துணைக்காலமு மெளியற்கோர்யுக
மொத்துளதோர்கண முனைப்பதென்பிர
வத்தகுபரீக்கையா லளந்திடாதுதன்
கைத்தலத்தடைபொருள் கவருங்காதலால் .................................................(௧௭)

உரகிலாவொருவனை யொருவன்வேட்பித்தாற்
பிரமராக்கதவுருப் பெறுதறிண்ணமென்
றரவநான்மனாகளு மறையுமம்மறை
விரவுவாதியர்களும் விளம்புவாரரோ .................................................(௧௮)

சொற்றதுமுழுவதுந் துணியுங்காட்சியிற்
பெற்றனுபவித்துளென் பிழையில்கொள்கையீ
ரிற்றைஞான்றும்மையா னெதிர்தலாலினை
மற்றிலான்வியாக்கிர புரியின்மான்மியம் .................................................(௧௯)

நுங்கள்வாய்க்கேட்டலா னுவல்கணத்திடை
யிலகுவீடடைந்தன னிளகிலாத்தவழ்
கங்கைவேணியநகர்க் காதையெவ்வயிற்
றங்குபுகேட்பினும் பலமித்தன்மைத்தே .................................................(௨௰)

அப்பதிவதியுணர்க் கறைதல்வேண்டுமோ
மெய்ப்பயன்சிறியனல் விரித்தவொல்லுமோ
செப்பரிதியாண்டுமெத் திருநகர்க்கணே
யெரப்பிலர்தணர்வனைந் தறைதல்சிரிதே ......(உக)

வேறு

அங்கிதீர்த்தத்தினுட்லும் வியாக்கிரபுரிவாழ்
மங்கைபாகனைக்காண்டனு மத்தலவனைப்பிற்
றங்குவாசமுமெவர்க்கெய்துர் தருமத்தின்விளைவாற்
பொங்குநீர்நிலத் தவரதிபாக்கியர்போலும் ...... (உஉ)

உவவுநாண்மதியனந்தகோடிகள் குழீஇயொன்று
யவனிவாய்க்கிடந்தகல் விசும்பளாவியதனைத்தாய்த்
தவளநீற்றொளிதூத்துகில் பொதிந்தெனத்தயங்கும்
பவளவெற்புறைகயிலைமால் வரையின்மேற்பயில்வார் ...... (உங)

கண்டுமேலவர்க் காண்பயனெதிர்புலனாகக்
காண்டலாயினதியாவர்க்கும் பெரியவர்க்கலத்தல்
வேண்டுஞ்செல்வங்க ளனைத்தையுந்தருமெனமேறைட்
பூண்டநூல்களிற் கேட்டதும்பலித்ததிப்போது ...... (உச)

அறைந்தயாவையும் முண்மையேநீவிராண்டடைமின்
சிறந்தபார்ப்பதி மங்களபுரமெனத்திசைபோய்
நிறைந்தசீர்நிருத் தாம்பரமென்னவும்நிலவிக்
கறங்குதண்புனற் றீர்த்தமூன்றொடுவௌங்கவினி ......(உரு)

சவிதுலும்பரதன சபையுடையதத்தலனி
லவீரொளிப்பொலன் விமானமூர்ந்தாண்டுதோறடைந்து
கவையடிக்குவிதிமில் விடைத்திங்களிற்கதிர்கால்
சவியுடைக்கலைநிறை தினத்தறநெறிநழைப்ப ......(உசு)

மும்மையாகியதீர்த்தத்து மூழ்குவல்யானு
மெம்மையாண்மங்க லேச்சுரன்றிருமேனிகாணத்

தம்மலர்த்தட மக்ஙினிதீர்த்தமத்தீர்த்த
மெய்ம்மையான்வெளி தோற்றலாலெவற்றினும்விசேடம் ................ (௨௭)

முகைமுறுக்குடைர்தொழுகு தேனுண்டளிமூசுந்
தகையலர்க்கொன்றை நம்பிரான்சந்நிதிக்குணபாற்
பகலலர்த்துதண்டாமரைத் தொகுதியாற்பயின்று
திகழ்வதோர்தடம் பிரமதீர்த்தப்பெயர்செல்ல ................ (௨௮)

கமலயோனியா லன்றிராதந்தரசற்பத்
தமைவதப்புனிதப் புனலாதலாலப்பேர்த்
திமையவில்லிதன் வடபுலத்திறையவீசானத்
துமைவகுத்ததம்பிரண்டிடைக் கழியினென்றுளதால் ................ (௨௯)

தெளிபுனற்சதா சிதளதீர்த்தமென்றதனை
லொளிவளைக்கையுஞ் சிதளையெனும்பெயருற்று
ளளிர்தடத்ததன் கீழ்கணாநாமமங்கலையாய
களியுடைப்பெருங் காளிவைகுவள்புறங்காக்கும் ................ (௩௰)

அனையதீர்த்தங்கண் மூன்றினுமாடன்மீப்புகல்வ
ரனைவகைப்புராணங்களு முணர்ந்தவரென்னக்
கனல்விழிக்கொடும் பேயுருத்துறந்தலர்கதிர்போற்
புனையுந்தேவுருப் பெற்றவன்புக்கனன்சுவர்க்கம் ................ (௩௧)

புனிததீர்த்தயாத்திரை பரமெனக்கொடுபோது
முனிவரோரிருவரு மவன்மொழிந்தவைகேளா
வினிதுவந்தனையோ ஞமைநிகழ்ந்ததுமென்னக்
கனியும்பத்தியி னதிகராய்க்கங்குலும்பகலும் ................ (௩௨)

அன்னகாதையே விளம்புபு செலவயர்ந் தடைந்தார்
பொன்னின்மூதெயில் விளிம்புசூழ் வியாக்கிரபுரிவாய்ப்
பன்னுமூவகைத் தீர்த்தமும் விதிப்படி படிந்தா
ரென்னைமுன்னர் நின்றியன்ற தானமும் பிறர்க்கீந்தார் ................ (௩௩)

கங்கைசூடருட்கடவுடதிர் கண்டுகண்களித்துப்
பொங்குமன்பொடு தொழுதனர்பழிச்சினர் புகழ்ந்தா

ரங்கன்வானுலகணைந்த வேதியன்கதையாங்கட்
டங்குஞான்மறைமுனிவர்க் கொருங்குசாற்றினரால்........................(௯௪)

மூன்றுதிங்களினள வவணுறைந்தனர்முனியா
தான்றதம்மனத் தியலுமிச்சையின் வழியகன்றூர்
சான்றகேள்வியீ ரின்னமா நகர்த்தனிப்பெருமை
யான்றுணிந்து முற்றுணாப்பதெங்ஙனஞ் சிறிதிசைக்கேன் ........................(௯௫)

இயற்கைமாந்தர் கண்ணிமைப்பள வாகுதலிமைக்குஞ்
செயற்கைவேலையிற் பாகமாகுதல் செழும்புனல்பாய்
வயற்படப்பைகு ழுத்தலத்தியாவரோவதிவார்
புயற்களத்திறை நிறைவிலொன்றுயவர்பொலிவார் ........................(௯௬)

ஐயமின்றிதற்கையமேற் றுலகுடனுள்வோன்
செய்யதாள்களிற் போர்தொடங்கினனெனத் தெளிமின்
மெய்கொள்சீர்க்கதை கேட்பினுஞ்சிமிறெழுந் தொலிக்கும்
பொய்கைமாநகர் நோக்கினுமக்கணப் போதில் ........................ (௯௭)

வேறு

ஐந்துகூற்றுமா பாதகராயினும்
பந்தநீடு பாதகராயினுஞ்
சிந்தைவெவ்வினை யர்வையுஞ்சிந்துவ
ருய்ந்துவாழ்வ ருணாத்தறதிண்ணமால் ........................ (௯௮)

யயிலுமப்பதி பஞ்சக்குரோசமாஞ்
செயிரிலங்தெழுத் தின்சித்திநல்கலா
லியல்வலோர்சித்த க்ஷேத்திரமென்பரா
லயருந்தன்ம மணுவணாமேருவே ........................ (௯௯)

அயிந்திராதியெண் டிக்கினுமம்புமூன்
றியன்றவீழ்ச்சி யிடைத்திசைசாவலர்
வியந்திறைஞ்சு மிலிங்கமம்மேலவ
ருயர்ந்தபேரொடு நாலிரண்டுள்ளன........................(௱)

மூந்துபூருவதிக்கின்மூழவுத்தோ
ளிந்திரன்வழிபட்டதிளந்தளி
ரந்தண்மல்லிகையாய்கொடிசுற்றிமுற்
றந்தசெவ்விந்தழும்பறிசின்னமாய் ........................(௪௧)

இகழ்ந்துதோன்றுந்தெரிசனமாத்திரத்
தகன்றதிப்பியஞானமளித்திடும்
புகன்றதன்றிருமுன்னார்ப்புணரிசூழ்
சகந்தழைப்பச்சதமகன்கண்டது........................(௪௨)

நலங்கிளர்ந்தொத்தநாற்சோனுடையதாய்
விலங்கும்புள்ளுமனேகவிதத்தன
கலந்துகொட்பக் கடிகமழ்பல்பொழில்
வலந்துசார்வதியென்னும்பெயரதாய் ........................(௪௩)

மணிகொழித்தனன்வார்புனற்றீர்த்தமொன்
றணியனைத்தும்படைத்துளதன்புகூர்ந்
திணையிலத்தலத்தெய்திநீர்மூழ்குநர்
துணிபினிந்திரதீர்த்தந்துளைந்துமுன்........................(௪௪)

உடலக்கண்ணனுடன்சசிதேவியை
யடைவிற்றாழ்ந்துவணங்கிடனுக்கைபெற்
றிடரறுக்குநற்றீர்த்தங்களியாவையுங்
கடவர்மூழ்கக்கதிவிழைகொள்கையார் ........................(௪௫)

பாகசாதனப்பண்ணவர்கோன்றினத்
தேகுதிங்கடொறுமிந்திரதடத்
தாகந்தன்னெனவுண்மகிழ்ந்தாடுவார்
போகமுற்றும்பொருவிலநண்ணுவார் ........................(௪௬)

ஆங்கணெய்திமார்க் கண்டனனேகா
ணீங்கநீங்கல ளிந்திரலிங்கமா
யோங்குமாத வீசன்முன்னுளைத்திறப்
பாங்கினெந்தெழுத் அம்பரிந்தோதுப ........................(௪௭)

காயொளிச்செங் கனலின்வடிவமா
யேயதானவி லிங்கமெனும்பெயர்
மேயநங்கள் வியாக்கிரபாதனைப்
போயிறைஞ்சுவ நண்பகற்போதெலாம் ........................................(௬அ)

பிருங்கியென்னும் பெயருடையோனுமாங்
கருந்தவம்புரிந் தம்பிகைபாகனைத்
திருந்தவர்ச்சனை செய்துமுன்பொய்யுட்
லிருந்துமுத்த னெனநிகழ்ந்தானரோ ........................................(௬௯)

ஆ பாயிரம் உள்பட திருவிருத்தம் அ௰௫

முதலாவது வேதமித்திரன் சுவர்க்கமடைந்த வத்தியாயம்

முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

இரண்டாவது கந்தருவகன்னியர் பிரமசாபந்தீர்த்த

வத்தியாயம்

திருமகிழ்ந்திறை கொண்டசாங்கல தேயமென்றொரு தேயமப்
பெருவளங்கெழு நாட்டகத்திடை பெருகுநீம்புன லிடையரு
திருதுமூன்றொடு மூன்றினும்பணை மிணர்தழைத்தலர் கமழ்தருந்
தருவினம்பல புடைமிடைந்தது தருமமோர்வடி வாயது ........................................(க)

நலமலிந்தது சோணபத்திரா யென்னுநன்னதி யொன்றதன்
குலவுதென்கரா யிற்சிறந்தது கொள்கைதுய சுமந்துவென்
றுலகுடன்புக ழிருடிவைகிய வுறையுளத்தலை யன்னவ
னிலவுதொல்குல னிற்சனித்தவ னியாணிலை பேதியான் ........................................(உ)

ஒருவனந்தணன் யோகமித்திர னென்றபேருடை யோனுளன்
பிரமசாரி நயிட்டிகன்விரதன் பெருந்தவ முயல்பவன்

முரிதிணைப்புனன் மும்மைவேலையு மூழ்குவன்மொழி சமிதையிற்
புரிவனாகுதி நவில்வனான்மறை போதகன்பணி காதலன் ......(௩)

ஐயமுண்பது சாந்திராயண மாதிநோன்பு நிகழ்த்துவன்
மையலைம்பொறி யோடுமுட்கர ணங்கடன்வய மாக்குவ
னுய்யுநன்னெறி யாயயோக வழிக்கருத்தினன் யோகநூன்
மெய்யுணர்ந்தவன் மெய்யினின்றெழு காலைநிற்ப விலக்குவன் ........(௪)

ஆதனங்கள் சுவத்திகஞ்சுரி சங்கமாமயில் குக்குட
மோதுகேழன் மடங்கல்பங்கயம் யோகதண்டொடு முசலமாம்
பேதமும்பிற வும்பயின்றிடை பிங்கலைப்பெயர் நாடியிற்
போதிரேசக பூரகங்கள் புரிந்துகும்பகமுஞ் செய்வான் ......(௫)

இன்னதன்மைய யோகியற்றின னொழுகுமேல்வையின் யாழ்வலோ
னன்மணங்கம ழியாதனென்பவ னல்குமொல்கு நுணங்கிடைக்
கன்னிமார்விழி வேலெறிந்துயிர் கவருமோகினி வடிவினார்
மன்மதன் படையாயினார் மதனாகமத்துறை போயினார் ......(௬)

வனத்திலாடல் குறித்தெழுந்து மகிழ்ந்துசெல்பவர் செல்வழி
முனைத்தமூழ்வலி யாலடைந்தனர் முனிவனாச்சிர மந்திரிந்
தெனைத்துநோக்ககி லாமல்யோகி லிருந்ததிண்ணிலை யறிஞனைக்
கனைத்துவண்டிமிர் பொம்மலோதியர் கண்டனர்நகைகொண்டனர் ......(௭)

முற்றுநீத்துறை பெருமைதேர்ந்துமம் முகிழ்நகைத்துவ ரிதழ்நலார்
பற்றுகாமவெந் தீச்சுடச்சுடப் படுதுயர்க்கடல் வீழ்ந்தனர்
சுற்றினார்நிறை நாணழிந்தனர் துணைவிமார்நுமக் கியாமெனா
வுற்றணைந்துபன் முறைவளைக்கையா லொருவர்போன்றுடன் றழுவினார் ......(௮)

சேர்ந்துபற்பல விகாரபேத மடுத்தடுத்தனர் செய்யவு
மோர்ந்திலன்புலன் வேறுபட்டில னோடரிக்கய லுண்கணார்
சார்ந்திழைத்திடு மிழிவினான்முது தவநெறிக்கடை தடையினைக்
கூர்ந்தசிந்தையின் முன்னருன்னுபு கோதறுங்குண மாதவன் ......(௯)

இவனெருங்கி வளைத்தமாதரா யெங்ஙனம்விடு வித்துமென்
றவலமிக்கல மந்துபின்ன ரகத்திலோர்வழி யெண்ணினான்

கவையடிக்கமுதாகுமென்று கறுத்துடன்றுசபித்தனன்
றவமுனுற்றுர வோற்பிழைத்திடு சாபமெய்திய தையலார் ........................(௰)

ஆங்கணைம்பொறி வென்றவீரனை யடிவணங்கி யொடுங்கிநின்
றேங்குதம்முபி ருய்யுமாறுனை யாவொருயி ரியாவையு
மோங்கவின்னருள் புரிதயாபர வுயர்குலத்தி லுயர்ந்தவ
திங்கில்கொள்கையின் முநிகள்புங்கவ சிறியரோமறியாமையால் ......................(௰௧)

யாதுசெய்தன மதுபொறுத்தருள் யாங்களின் பரிசாரக
ராதுமென்ன முனிச்சயித்தலி னம்பொனைந்துடை வில்லியார்
மோதுபோரி லுடைந்துநின்னுழை துன்னினம்முய றவநெறிக்
கேதமெய்து மெனக்குறித்தனை யெம்மையின்று சபித்தனை ........................(௰௨)

நின்னலர்ப் பதமிசைவீழ்ந்தன நிறையழிந் தெழுவிரசனோ
யின்னலுற்ற தகற்றியெம்முனை மெண்ணுமாறு நிரப்புவாய்
நன்னரின்னிசை யாழ்வலோர் மடவார்கள் யாமொருநீசரன்
பன்னுநான் மறையோன் மகன் பயிலேலது வின்றி யோருழிஞல்.....................(௰௩)

ஆதரித்தன முன்னையூழ்வலி யார்தடுப்ப ருயிர்க்கெலாம்
பூதலத்துறை பெரியர்தண்ணளி புரிவதல்லது முனிவரோ
காதலித்து வரித்துவர்தனைக் கன்னியர்க் கருளாதவர்க்
கோதுநூல் பலவும்பெரும் புக்குண்டெனத் துணிகிற்றவே ..........................(௰௪)

புரிநரம்புளர் வீணைவல்லவர் மகளிர்யாம் புலிவானவர்
குரிசிலாதலின் யாழினோர்மண விதியினெம் மொடுகூடுவாய்
வருவதோர் பழுதின்றுமன்றன் மறுத்தியேலுடன் மடிதுமென்
றுருவவெள் வளையார்களித் தகுமனைதெரிந்து புகன்றனர் ..........................(௰௫)

தெள்ளியோனது கேட்டுவெவ்விய சினமொழிக் தருளுடையனுய்
பிள்ளையன்னமன் னீர்கணீரிவண் பெரிததிக்கிரமஞ்செய்தி
ருள்ளுசாப மடைந்தநீரொழி யாதுழப்பது திண்ணமால்
விள்ளுமோகவில் பிரமசாபமெவற்றினும்மெறும் மிக்கதே ........................(௰௬)

நயந்துபின்ன ருணாத்தலிற்சில நாள்கழித்திடு சாப்மும்
பெயர்ந்துபோக விடுப்பனீவிர்கள் பேயுருக்கொடு சென்மினம்

வயங்குபொன்னெடுமணிகொழித்தெறி வை கையாற்றதுதென்கரைப்
பயன்படும்பல்வளத்ததோர்பதி பதியனைத்திறுவிழுமிது ...........................(௰௭)

வெதிரிகாரணியம்பிதாமகன்வீடுவேலையுமழிவிலா
ததனின்மங்கலதாவிசிப்பெயரன்னமின்னுமிழ்வேலவன்
மதுகைமொய்ப்புடைநந்திமாறில் கணங்களோடுமகிழ்ச்சிகூர்ந்
தெதிரிலெர்தைவியாக்கிரோசனிருக்குமத்தலையெய்துவீர்..............................(௰௮)

வேறு

யாழார்மொழியீரத்தலத்தி லியானும்பிரமசரியைமுடித்
தாழாதும்மைமணம்புரிவ னொழிக கவலையெனவுணர்த்துக்
காழார்மிடற்றோன்பரிபுரச்செங்கமலமிதையகமலத்திற்
சூழாவெழுந்தான்பொறிக்குறும்பு துலைத்தஞானச்சுடர்வாளோன் ...................(௰௯)

திருந்தும்புனிதநீர்குடையச் செல்கேமென்றுமொழிபோக்கிப்
பரிந்துபயின்றும்பிறர்க்குரைத்தும் பன்னூற்றுறையுநிறைபுலவோர்
வருந்தவடித்துத்தொடுத்தெடுத்த மதுரத்தமிழ்போற்றிசைதோறும்
விரிந்துகமழ்பூந்தண்டலைசூழ் வெதிரிவனத்திற் சென்றணைந்தான் ......................(௨௰)

பிறழ்பற்பகுவாயுலறுகுழற் பிணர்மோட்டலகையுருவினரா
யறிவுகுடிபோய்மருண்டொழுகு மந்தீங்கிளவிமடவாருங்
குறைவின்றோராண்டகன்றதற்பின் குறித்தமுனிவோனுமைமனங்கொண்
டெறிவாட்பருதிபுடைவிலங்கு மெயில்சூழ்வெதிரிவனத்தடைந்தார் ..................(௨௧)

எழுதாக்கிளவிமறைமுழுது மிணைத்தென்றுணர்ந்தவரவோனும்
பொழிநீர்ப்பிரமதீர்த்தத்திற் புக்குமூழ்கிவிதிமுறையின்
வழுவாவண்ணநித்தலுஞ்செய் கன்மமுடித்துவானந்தோய்ந்
தொழுகுபொலன்கோபுரத்திடப்பாலொருகோட்டிபத்தை யடிதொழுது...........(௨௨)

அணிகோயிலினுட்புகுந்திமையோ ராவிதழைப்பவிடமுண்ட
மணிபோன்மிடற்றுத்தெள்ளமுதை வணங்கிமும்மைவலஞ்செய்து
திணிதோணந்திமுதல்கடைகாப் போர்ப் பணிந்துதிங்கண்முடிப்
பணியாபரணனெதிர்நின்று பலகால்வேதத்துதியெடுத்து..................................(௨௩)

மாருவதுக்கைகொடுபெயர்த்து வரித்தேனலம்பாடவுடைத்து
சேருர்கமலத்தயன்படைத்த திருத்தகீர்குன்சிகைமுகந்து
நீருடழகனெழுத்தைந்து நெறியாலபிமந்திரித்துநிலை
வேருயுழலுங்கழுதினத்தை விழித்தப்புனலாற்புரோக்கித்தான் .........................(௨௪)

இறைவனருளாருயிர்மறைப்போடிருளென்றைந்துபொருளாகி
திறைமந்திரத்தானுனமுஞ்செய் வித்தானிசழத்தொழிலிரண்டின்
முறையினலவைகிலேகித்தார் முன்னைத்தமதுவடிவடைந்தார்
பிறைகண்டனையதிலதநுதற் பிணைபோனெடுங்கட்பெய்வளையார் .................. (௨௫)

நாதவடிப்பேரணங்கினுட னம்பனடியைத்தொழுதிறைஞ்சிப்
போதநிரம்புமகிவரர்கள் புவிவானவர்தம்பதம்பணிந்து
சேதநிலவுசதிருரிஞ்சுஞ் செம்பொன்னெயில்சூழ்நகரில்
வேதவிதியாலன்னவர்தோள் வேட்டான்யோகமித்திரனே ..........................(௨௬)

குழகன்கோட்டத்தென்கீழ்பாற் குரோசபாகத்தள்வையின்க
ணழகிதாயோராச்சிரம மமைத்தாருயிர்போற்கொழுநனே
தொழுதெய்வதமென்றிட்டிடையார் துணிந்துபரிசாரகஞ்செய்தார்
மழவெள்விடையோற்பூசித்து வதிந்தார்சின்னாளிடைநடப்ப ........................(௨௭)

புரிமென்குழலும்பணைமுலையும் பொருக்கலாற்றுவிடுகிடையார்
கரியமிடற்றுச்செஞ்சடனாக் கைகள்கூப்பி யிரந்தெமது
துரிதமனைத்தும்போக்குதலாற் றுரிதாபகனென்றுன்னமம்
பெரிதுநிகழ்தல்வேண்டுமெனப்பின்றாழ்சடையோனதுநேர்ந்தான் ... ...............(௨அ)

வையம்பயந்தசிற்றதர மலைப்பூங்கொடியும்வடிக்கண்ணு
ளையகமழுநறுமலர்க்கொன்றைருச்சித்தமையாலன்றேர்க
ளுய்யவரந்தந்தெண்டிசைசூ முலகமேழுங்கிளர்ந்துணப்பப்
பொய்யில்சுருதிபுகழ்தன்பேர் புட்பதனியென்றுயினளால்...........................(௨௯)

ஆயும்பொருணன்மறைவடிந்தோ ணங்கிதிர்த்தப்புனல்வடித்தந்
தோயங்கமழுவிளையுட்டித் தொகுவாய்க்கலங்களொருநூற்று
லெயுநெதியான்முப்போது மிறையோற்காட்டிவகைமுறை
யேயம்பெருகவழிபட்டு நெடுநாளாக்குவைகினன் ...................................(௩௰)

யாவனொருவ னோர்குடமுச் குடமைங்குட மேழ்குட மாத
லோவில்சு டர்ப்பாவகதிர்த்தத் தொளிவெண்டுகிலின்வடித்தெடுத்துத்
தூவென்பொடியோன்முடிக்காட்டு மவனுத்தமனத்தொழிற்பயனைப்
பரவைபாகனுணர்வதலால் யாரோதுணிந்துபகர்கிற்பார் ................................ (௫௧)

வேறு

நவிலுமறையந்தணர் நறும்புனல் கொடாட்டி
னவபிருதாானமுள ராய்துகர்வர் போகம்
பவனுவகைசெய்யநர பாலரது செய்யிற்
புவனமுழுதாள்வரொளிர் பொன்முடிசு மித்து ................................(௫௨)

பிறதமவெனப்பெரிது பேணி யியல்கின்ற
வறவினைவயிச்சியர்க ளடைவர் பொருளீட்ட
முறையினவர் பின்மொழியு மூதறிவின்மாந்த
ருறுகன்வினை ருன்பமுழ வார்பெறுவ ரின்பம் ................................(௫௩)

ஞென்டிறுதிமீனமுத னிச்சநறை வேருட்
சொண்டுகமழ்தண்புனல் கொழுங்கனிகொள்சாற்றோ
டண்டர்பெருமானையினி தாட்டியருள்வித்நான்
மண்டுபவநூறுதொடர் குன்மகிலமாறும் ................................(௫௪)

நுழைமயிரொழித்திழை நண்ணுகுதுகில்பட்டும்
பழமறைமுதற்குதவுப் பண்பமொவமோனு
மொழுக்கொளிதுலும்புபோல ஞைடையுடையோரா
யழகுகிளர்செந்தைபுவ னத்தமர்வர்பன்னாள் ................................(௫௫)

குடம்புனைமடிக்கலை குரற்சுரபிகன்றோ
டடும்பணிசடைக்கடவு ளாடியகொடுப்போர்
விடுந்தகர்மயிர்த்தொகையின் மிக்கபலயாண்டு
நடம்புரிபிரானுலகி னச்சணியுறைகிற்பார் ................................(௫௬)

இடக்கையதிர்பேரியொலி காளமிவைமுதல
வுடைத்தொழினடப்பகிழ் வித்தவர்தம்முள்ளத்

தடைத்தவிழைவின்படி யடைந்துகளிகூரத்
தடக்கயிலையாதிபத மெய்துபுசரிப்பார் ..........................................(௩௭)

அன்னியதலத்திடை யமர்ந்தவருநித்தம்
பொன்னெயில்வியாக்கிர புரத்திசையைநோக்கி
யுன்னுபுவலந்துதொழி னுண்டுபரிவேள்விப்
பன்னுபலனவ்வளவை பல்வினையுநீங்கும் ..........................................(௩௮)

மங்களபுரேசனை வணங்கியயனுட்டிற்
றங்களுயிர்வினோர் தழற்கனுதலோன்வா
ழங்கணுலகத்தலைந்த நிண்ணமவண்வைகும்
பொங்குபுகழுத்தமர் திறம்புகல்வதென்றோ ..........................................(௩௯)

சேண்டொடநிவந்தசிக ரத்துருவுசேணிற்
காண்டலுமிறைஞ்சுநர் தமைச்சிறிதுகாண்போர்
பூண்டவினைதீர்வதுமெய் போகமொடுவீடு
வேண்டுநர்களத்தலை விழைந்துறைதல்வேண்டும் ..........................................(௪௰)

இரண்டாவது கந்தருவகன்னியர் பிரமசாபந்தீர்த்த வத்தியாயம்

முற்றிற்று

ஆ அத்தியாயம்(உ)க்கு திருவிருத்தம் ௱உ௫

மூன்றாவது

ஐந்தெழுத்துணைப்போர் விபூதிருத்திராட்சந்தரிப்போர் பேறுணர்த்த

வத்தியாயம்

பள்ளவாய்க்கமலந்தோறு மட்டாடைக்குருகுசெப்ப
வெள்ளநீர்க்கிடங்கைசூழும் வியாக்கிரபுரியின்வைகிக்
கள்ளருத்துணர்ப்பூங்கொன்றைக் கண்ணுதலெழுத்தோணர்ந்து
முள்ளவாய்க்குழைந்தின்பூற வுணாப்பவர்பேறுசொல்கேன் .......................... (௧)

பிறங்கொளிச்குடிலையென்னும் பிரணவமுன்னர்த்தாகச்
சிறந்தரவொலியிற்கூடித் திகழுமந்திரமூலத்தை
யறங்கனாகுரவன்வாய்ச்கேட் டக்கான்மணிமெய்பூண்டு
நிறங்கிளர்வெண்ணீருடி நியாதமுமுறையினுற்றி ................................ (உ)

தெரியலர்புரங்கண்மூன்றுஞ் சிவப்பவெண்முறுவல்கோட்டுங்
குரிசில்சந்நிதியிஞேர்பாற் கொடுவரிப்புலியின்பச்சை
கரியமானுரிவைமென்றேல்கம்பளம்பலகைதூசோ
டுரியவாதனவிசேடத் தோன்றணிவினிதமர்ந்து ................................ (ங)

உருத்திகழக்கமாத லொளிர்குசைக்கிரந்தியாதன்
மருத்தவழ்புண்டரீக மணியாதல்படிகமாதல்
பொருத்தியவொழுங்குவாய்த்த புத்திரதிபியாத
திருத்தகுபவளமாதல் செபவடம்வலக்கைசேர்த்தி ................................ (ச)

தாயினுமினியமூர்த்தி தனதடியானித்தன்பா
லாயிரத்தெட்டுநூற்றெட் டிருபத்தெட்டுருவவற்று
ளேயினவணர்துகொண்டாங் கிடையிலாவித்தலாதி
தியனபுகாதுமும்மைத் திறத்தினிலொருமைபற்றி ................................(ரு)

செவிப்பவன் யாவனேனு மவன்சிவ வடிவேயாவன்
புவித்தலை யனையோற்காணிற் போக்கருந்துரிதநீங்குந்
தவப்பயின்றங்கமோடு சதுமறையுணர்ந்தபேறு
நிவப்புடைவடகுன்றேய்ப்ப நிதிபொழிபயனுமெய்தும் ................................(சா)

பல்பயிர்விளைபொற்பூமி பணித்தடைபலனுங்கூட்டுஞ்
செல்பரிபுரவித்திண்டேர் சிறியகட்பெருங்கைவேழ
மல்குபாற்கபிலைநல்லான் மதரரித்தடங்கட்கன்னி
நல்குபேறனைத்துமோர்கா னவில்செபமளிக்குமன்றே ................................(எ)

தேசிகன்விதியிற்கூறச் செவிதுழைந்திதையம்புக்கா
லாசிலைந்தெழுத்தும்பெற்றே னுருத்திரனையமின்று
பூசுரன்வேந்தனுய்கன் பின்னவன்பொன்னனுருங்
காசைபோன்மிடற்றேனுமங் கழறுதற்குரியராவார் ................................ (அ)

பலபவத்தறங்களீட்டிப் பயன்படுசெத்தியெய்தி
யலர்தலையுலகிற்றோன்று மருளுடைமாந்தர்க்கெல்லா
நிலவொளிபழுத்தநீற்றி னிகரிலைந்தெழுத்தினெம்மான்
மலர்விழிபணியிற்பத்தி வரும்வராதொழிந்தோர்க்கென்றும் ........................ (௯)

செற்றமும்விழைவுநீத்து சிவனடிக்கன்புபூண்டோர்
முற்றருந்தவத்தால்யாவர் குலத்திடைமுளைத்தாரேனு
மற்றவர்மரபினுள்ளோ ரனைவருமதியம்பூத்த
கற்றைவார்சடைக்காட்டெண்டோட் கட்வுடன்புரத்திற்சேர்வார் ..................... (௰)

வேறு

சிவயாகத்திலக்கினிகோத் திரத்தில்வைதிகாக்கினியி
னவைதீர்விரசைமகத்திலமைம் நலங்கொணீறுகுதன்மும்மைக்
கவர்வேற்படையோன்சந்நிதியிற் பூதியாதல்கைக்கொண்டு
பவவேர்களையுமைந்தெழுத்தா லபிமந்திரித்துப்பத்தியுடன் ........................ (௰௧)

சென்னிநுதலாகியவுறுப்பிற் றிரிபுண்டரஙித்தலுநூலிற்
சொன்னநெறியாலணிந்தொழுகுந் தூயோர்கடக்கிற்பதந்தோறு
மென்னையுடையான்வெளிதோற்று மிலிங்கமூர்த்தமொருகோடி
நன்னர்விதியாற்றாபித்தார் நண்ணுந்தருமநண்ணுவரால் ....................., ..... (௰௨)

சிறப்பில்சிதடருணாகவராச் செவியர்சிறிதுமொழிவாயிற்
பிறப்பினுமரிழிகுலத்திற் பிறந்தோர்சநனமமர்நோயறுக்குஞ்
சிவமந்திரமுணர்த்தற் கருகரல்லாதவரேனு
நிறத்ததூவெண்பொடிபுனையி னிலமேற்சிறந்தாரவர்மன்னே ........................ (௰௩)

வேறு

புனிதநன்னிலைமைவாய்ப்பப் புகலுமாசாரமில்லோ
ரெனினுமென்மலர்ப்போதேந்தி யிறைவனைவழிபட்டேத்திக்
கனியுமன்புடையரல்லா ராயினுங்கழியாத்துன்ப
வினையினுநீங்கித்தூயோ ராவர்வெண்ணீறுபூசின் ................................ (௰௪)

சதிபெறவிழைந்தோர்கண்டி கிடைத்திலதென்னிற்காமுற்
றதனுருவலங்கொண்மன்னி னமைவரவினிதமைத்து
விதிவழிதவளநீற்றிற் புரட்டுபுதரிக்கின்மெய்யே
யெதிரில்சிரக்கம்பூண்ட விரும்பயனெய்துமன்றே .................................. (௯௫)

இருநிலத்துதித்தமாந்த ரெவ்வகைவிரகினானு
முருவவெண்டிங்கட்கண்ணி யொண்சுடர்க்கடிமைபூண்க
தெரியினங்கவர்குலத்துத் தென்புலத்தோர்களெல்லாம்
பொருவறுசிவலோகத்திற் புக்குவீற்றிருப்பர்மாதோ .................................. (௯௬)

மூன்றாவது

ஐந்தெழுத்துரைப்போர் விபூதி ருத்திராட்சந்தரிப்போர் பேறுரைத்த வத்தியாயம்

முற்றிற்று ஆ திருவிருத்தம் (௩௪௧)

நான்காவது

தீர்த்தச்சிறப்புரைத்த வத்தியாயம்

பொறிவரிப்பணாட்விப் புயங்கநீண் முடிக்கிடந்
தறைகுரற்கடலுடுத்த வவனியாதி யுலகிடைக்
கறைமிடற்றசென்னிறக் கடவுள்வாழ் பதிகளாண்
மரிதினைத்திருத்தநீர்க ளெண்ணிறந்த வைகுவ .................................. (௧)

யாவையுமளிப்பன வவற்றின்மூழ்க வெய்துமோ
பாவகாரியர்க்கறப் பயன்விளைகிலர்க் கலான்
மேவுமெய்முயற்சியா னவைகிடப்ப வேறுமூன்
டோவிலாததீர்த்த மானிடர்க்கெளிதி னென்றுவ .................................. (௨)

தானமொன்று கருணையொன்று சாந்தியொன்று மெய்யுணா
யானதொன்று மகிழ்தலொன் றகிஞ்சையொன்று சமதையொன்
றானிலைம்பொறியடக்க லொன்றுகாம வெகுளியா
மீனமொன்றுமில்லதொன் றினிதுகூற லொன்றரோ .................................. (௩)

ஏதிலர்க்குதவலோன் றேதிலா ருடைப்பொருள்
காதலிப்பதின்மையோன் றயன்மனைக் கயற்கணார்
மீதுகண்படாமையொன்று விழைகுடும்பநிறுவலோன்
ரோதலொன்றுதந்தைதாய் குரவர்சொற்களோம்பலே .............. .................(௪)

மந்திரஞ்செவித்தலொன்று கோட்சொல்வாய்விடுத்தலொன்
றுய்ந்துபோதல்கூடுமெற் றிவற்றினென்றுமுண்மையே
சிந்தைசெய்யுமானத தீர்த்தமாயதரிதுமெந்
தெந்தயோகதீர்த்தமும் யோகசிலர்சார்வதே ........................................(௫)

கன்னிமுதேயிலுடுத்த காசியாதிநகர்களின்
மன்னுதீர்த்தமுள்ளன வரத்தினிற்சிறந்தன
பன்னுதுங்கபத்திரா பகீரதிகவுதமை
பொன்னிகன்னவேணிபஞ்ச கங்கையென்பபுலமையோர் ..........................(௬)

நதிகளாயவற்றினுந் நதங்களாயவற்றினு
மதிகமீதெனப்படு மங்கிதீர்த்தமன்னதுஞ்
சதுமறைக்கிழவன்முன் றரும்பிரமதீர்த்தமு
முதயனென்னவொளரிலிங்க நயனமத்தினிலவுவ ....................................(௭)

திசையிறைஞ்சவுத்தர காசிபோற்சிறத்தலா
லிசைபரந்துதெக்கண காசியென்றுபேர்பெறும்
விசையுடைப்பசும்பரி வெய்யவனயர்வுயிர்த்
தசைகொடிப்புரிசைசூ ழணிவியாக்கிரபுரம் ...........................................(௮)

குட்புலத்தைநோக்கியுங் குணபுலத்தைநோக்கியும்
படருநன்னதத்தொடு நதியவட்பயிலவன்
விடனகன்றபாதலத் தியங்குகங்கை யாறுமத்
தடநகர்க் கண்ணுள்ளது சங்கமித் துயர்ந்ததே ..........................................(௯)

சங்கவெண்குழையினன் சந்நிதிப்பெரும்புன
லெங்கணுஞ்சுரநதிக் கேய்வகன்னல் வேலிசூழ்
மங்கலபுரியுறை மழுவலாளி முற்றிக
ழங்கிதீர்த்தமுத்திநல்கு மாடல்செய்யு மளவையின் ..................................(௰)

வேறு

மாணிடத்திற்காணவமக் காணவத்தி னாரிடமற் றதனிற்றெய்வ
மாணதொருநூற்றுமடங் கதிகமதிற்சித்தரமைத் தருளிலிங்க
மீனமறுதெய்விகத்தோ டொக்குமிவற்றினிற்சயம்பு வெனுமிலிங்கந்
தானுயர்ந்ததனைந்நூற்றேருடைஞ்நூற்று மடங்குளாத்தச்சயம்புத்தன்னில் ........ (௰௨)

புராதனலிங்கங்கோடி குணஞ்சிறந்த தவ்விலிங்கம்பொலிதலாலித்
தராதலத்துளெல்லோருமிகுத்துணைப்பப்பிரமபுரந்தழைத்தநீடும்
பராபரியதீர்த்தங்களெவற்றினுமக்கினிதீர்த்தம்பலன்வழங்கும்
விராவினயர்தாமேர்க்கெவ்வேலையினுநியதியின்றுவேலைமாதோ ........................ (௰௩)

அப்புநிதநீர்குடைந்துமுள்ளனாவள்ளிதழ்ச்சமலத்தலங்கன்மாலை
மைப்படுகேந்தரன்மங்கைநாயகற் சோர்முறைவழங்கின்மனததுவேட்ட
துப்புரவந்நிலையடைவர்குசுமமலர்தோய்த்தொளிர்நுண்சேகல்கி
னிப்புவியின்மைந்தர்பவுத்திரர்குழுநிலமுழுதாண்டின்பந்துய்ப்பார்........................(௰௪)

அம்மையினும் பிறைமுடித்த முக்கணன்போ லுருவுடையராகி வானூர்
மொய்ம்மணி வேய்ந்தொளிபரப்பு கநகவிமானத்திவர்ந்து முழவினார்த்துப்
பொம்மெனவீழ்ந் தொழுகருவிக் கயிலைவரை மருங்கணிபூம் பொழிலினீந்த
செம்மைநிறத்துகிலினிழை யெத்துணையத்துணைவருடன் திளைத்துவாழ்வார் ........(௰௫)

முன்புகல்சித்திரைமதியில் வெண்சுடருஞ்செஞ்சுடரும்முயங்குநாளி
னன்பகலிலெள்ளருகு கோமயஞ்சென்னியிலிருத்திஞாலமீன்ற
பொன்பிதிர்வெம்முலைமடந்தை தேவிதீர்த்தத்தி னிதுபோந்துநின்று
மின்பொழிபல்கதிரோனை யுதித்தியமென்மந்திரத்தால் விதியினேத்தி.................. (௰௬)

மாசறஞானம்புரிந்து பாதாளசேச்சுரனை வழிபட்டோர்க்குப்
பேசரியபிரமவதை யுடன்றீருநட்பினிடைப் பிழைப்பிற்றேன்று
மாசகலுமம்மதியிற் கதிரவனவாரத்துதையத்தங்கன் மூழ்கிப்
பூசுரர்க்கெண்ணிரண்டு படியுழந்தளிக்கில்ரணாவை போகுமன்றே......................(௰௭)

அம்மதியின்மதிசிரம்புதிதியினடு விற்பரிதியடையும்போழ்தின்
மெய்படையின்மனுநவின்றப் புனல்படிர்தவிடையுயர்த்த விமலன்வாழுஞ்
செம்மணிக்கோயிற்குணபா லனாக்குரோசத்தளவிற்றிருந்த மாற்சீழ்க்
கொய்ம்மலரோனியற்றிலிங்கந் தெரிசிப்போரநதவரர்வெங் கொலையிற்றீர்வார் — (௧௭)

உயர்ந்துநளங்கிமில்விடைத் திங்களிற்றங்கணிறை திதியோடுறுவிசாகந்
இபங்குபகலிடைப்பொழுதி னிளந்தளிர்ப்பாசறுகரிசி சிரத்தின் மீக்கொண்
டயன்குபின்றபிரமதீர்த்தம்படிந்து நறுந்ததியோர்டளாய்மூரல்
நயங்குபுரிநுன்மார்பி னாதனர்ச்சிப்பவர் கிரயஞ்சார்வதின்றே ...................... (௧௮)

மறைக்கிழவனுலகடைய வினைழந்தனரோ வெய்துவரம் மாசீராடி
ஈறைக்குழலிகாதவதி யடிவணங்கி யுமாகாந்த னளினம்போலுஞ்
சிறப்புடையபதம்பணிந்து சிராத்தவினை புரிந்தனரேற்பிதிர்க்களெல்லா
நிறச்சுடர்வெய்யவன்மதிய முள்ளளவுந்திருத்தியராய்நிலவுவாரே ...................... (௧௯)

கழைக்கரும்புகன்னுடைத்த சாறடுதீஞ்சுவைவிசயங் களாத்ததெண்ணீர்
புழைக்கொடுமுச்குயர்ந்தணைந்து புடையசன்றகன்னலின்மென் சுணையின்வாக்கிப்
பிழைப்பிலறநெறியொழுகுந் தாபதர்க்கற்றையஞான்று பெட்பினீவோ
ரிழைத்தகொடுவினைப்பிணிப்பு நீங்குவர்நன்னலம்பெறுவர் யாவரேனும் .......... (௨௰)

அப்பிரமதீர்த்தத்தி லானியிற் பூருவபக்கத் தசரோத்து
மொப்பில்குரவன் வாரத்துதய வேலையில்விண்டு சிரார்திதாங்கிச்
செப்பருமச்சுவாகாந்த மனுமூலமனுவாதல் செபித்துமூழ்கி
மெய்ப்பொருளாகியஞான நாயகனைப்பொன்முலையை வீழ்ந்துதாழ்ந்தோர் ..........(௨௧)

அலகில்பெருந்திருவுறுவ ராதிரஸ்திதிலமுறை சந்ததியுமோங்கி
நிலைபெறுமாடியிற் கலைகணிறையுவவி நப்புனரேயுந் தாவில்பரலை
னலமலிந்த வெதிரிவநாதனை யாட்டிக் கபிலநறிய நெய்யும்
பலனெடுங்கன்னலு மளவிப்பதன்னமைந்த பாயசமு நிவேதிந்தோர்கள் ..............(௨௨)

தாங்கரியகுன்மமெனும் பிணிதீரவ ராவணியிற் சனிவாரத்தில்
வீங்குசதிரிரவி யகல்விசும்படுதோய் போழ்தின் மேருவில்லாய்
வாங்குதனி முதல்வனையு மலையீன்றகரும்பினையுந் தயிலநெய்யாற்
பாங்குபெற வபிடேகம்பண்ணுவித்துமுடிதாழ்த்துப் பணிந்துபோற்றி ............(௨௩)

திருவளர்சந்நிதிநின்று செஞ்சுடர்ச்செல்வன் புதல்வ னுவகைபூப்பக்
கருநிறத்தகம்பளமுங் காரிரும்பு மந்தணர்தங் கைவினீவோர்
வெருவருமர்தனில்வினையு மிடும்பையிலர் மிருகமதித் திங்களாண்டில்
வருதொறுமுந்துளாத்த பரிசாங்கியற்றி முடிந்தசனி வாரந்தன்னில்....................(௨௪)

இயன்றளவைநான்மறை தேர்திருபிறப்பாளர்க் கடிசிலினிதீந் திங்ஙன்
முயன்றவர்தம் மரபில்வழி யுள்ளளவுமுதுமகன்செய் சிறுமையில்லை
நயங்கொளியா யெங்குநிறைந் தெப்பொருளுமாய்வேறாய்த் தழுவிநின்ற
புயங்கதர னுழைச்சிறந்தபேரன்பாற் பாக்கியத்தாற் பொலிவரொன்றும்...........(௨௫)

வேறு

கன்னிமதியில் வெண்டிங்கட் கலைதேய்பக்கத் தட்டமியின்
முன்னரறைந்த தீர்த்தத்தின்மூழ்கி யெழுநா மறைப்பொருளின்
பொன்னங்கழல்க ளர்ச்சித்துப் புரிந்துபின்போதக மறையோர்க்
கன்னமளிக்கி லவர்பிதிர்க்க ளடைவார் சுவர்க்கத்தங்கிலையே ......................(௨௬)

அறையும்பிரமதீர்த்தத்துக் கனிலதிசையி லந்தகர்க்கோர்
சிறையம்பளவிற் கவுமார தீர்த்தமுளது சூர்துளங்கப்
பறவைவனாயின் மார்பிடந்த பரிதியோள்வேற் படைத்தடக்கைப்
பிறைவன்புதல்வ னிருமித்த திமையோர்வியப்ப நிலவுவது ......................(௨௭)

பகல்காலிரவி விருச்சிகத்திற் படர்திங்களின்த் தடம்படிந்து
மகவான்மகளுங்குறமகளு மணக்குந்திணிதோண்மணவாள
னிகர்போயெறிக்கும் பொலன்கழல்க ணெஞ்சத்திருத்தி தொழுதிறைஞ்சிப்
புகழ்வார்க்களிக்குங் கனிமதுரம்பொழியுங் கவிதை பொழிவளமே......... ... ....(௨௮)

ஆங்கட் சிறுபாசிலைவன்னி மூலத்துறையு மட்டல்வலியாற்
றூங்கரிய கவுமார சத்திசெவ்வே ணிறைவன்
பூங்கட்சொடிப்பேர் ராதவதிபுரிவோர் நாமுத லெவ்வயுங்
கோங்கிற்குவிந்து பணைத்தமுலைக் கொம்பினருக்கை பெறல்வேண்டும் ............(௨௯)

சுவையார் தீம்பாற்பாயதமுந் தூவெண்ணிறத்த கோதம்பை
யவையா லமைத்தபோனகமு மன்பின்வட்கு நிவேதிப்போர்க்
கெவராயினும் வெம்போருடற்றி யிசனுர்தெவ்வர் நிலையழிவ
ரவர்பாற் செல்வமுழுதடையு மரிதொன்றுளதோ வன்னவர்க்கே ...................(௩௰)

பறவாப்பூவை மலர்ந்தனைய பசியகழுத்து மயிலூர்ந்து
சிறைவாரணப்புட் கொடியுயர்த்த சேயோன்விதித்த தீர்த்தநீர்
முறைபாலாறுமதிநடிப்ப மூழ்கின் மகப்பே றிலரோரும்
அறைவாய்வகுத்த மணிச்சுதங்கை யடிப்பொற்சிறுவர் பெறுவாரே...... ........ (௩௯)

நான்காவதுதீர்த்தச்சிறப்புரைத்தவத்தியாயமுற்றிற்று
ஆ திருவிருத்தம் ௱௭௨
ஐந்தாவதுஅரித்துவசன் சாபந்தீர்த்தவத்தியாயம்.

மகதவள நாட்டதிபன்மதிக்கடவுள் வழிவந்தோ
னிகவெறி வேலரித்துவச னெனும்பெயரோ னருங்கற்பி
னிகரமைந்த புகழ்ச்சுமதி யுமிழ்ச்சொழுக னெறிபோகிப்
புகரிகந்த பேரமைச்சர் புரோகிதர் தன்னினேயோடும்.......................... (க)

மழையுரிஞ்சு நெடுங்குடுமி மாடநிரை புடைசூழ்ந்து
விழைதகு காம்பிலிநகரில் வீற்றிருந்து தெவ்வேந்தர்
கொழுநிதிக் குப்பையுமணியுங்கொணர்ந்து கடைத்தலையுணங்க
முழுதுலகம் பொதுநீக்கி முழுச்செங்கோல் செலுத்துநாள்........................ (உ)

பரவுபெருந் தவமுயன்று பசையறவூன் புலர்ந்தென்பு
நிரைகிளர்ந்து விளங்குருவ னிமிர்ந்துபுரி புன்சடையோன்
விரகினுயிர் மெய்ம்மயிர்நீண்டோன் வெண்பொடியன் கண்டிகையன்
மரவுரியன் மாண்டூலன் மறுவறுநன் னெறிநின்றோன்............................. (௩)

எண்ணருஞ்சீர்த் துருவாச னென்னுமுநிவரன் யாண்டும்
புண்ணிய நன்னீராடன் மேற்கொண்டு பொருதிரைசூழ்
மண்ணடைய வுழிதந்து வளங்கெழு காம்பிலிமூதூர்
நண்ணினன் வெம்பசியலைப்ப வருந்துபு நன்பகற்பொழுதில்........................ (௪)

இன்னடிசில் விழைந்தருமேற் றெதிர்பிளிறுங் களியானை
மன்னர்பிரானுறைகோயில் வாயிலடைந்தன னடைந்தோர்க்
கன்னலன வவணிற்பக் கனைகழலோ னுணாது
மின்னிழையா ருவளகத்தில் வினைவழியின் வைகினன்.... ........................(௫)

நெடித்ததுபோழ் தெமையோரா னிருபனவ மதித்தன்றூன்
கொடுத்திலனென் றுருத்தழன்று குமரகண்ட னடைகவென
வடித்தொளிர் வாட்படையோன்பான் மாதவனெய் தெனச்சாபம்
விடுத்தயல் பொயினனிங்ஙன் விளைந்துநிகழ் பொருண்முற்றும் ....................... (சு)

ஆண்டு வதிபவர்மிகவு மஞ்சிவருந்துபு கடிபோய்த்
தூண்டுநுதி வாம்புரவிச் சுடர்முடியோற் குணர்த்தினு
ரீண்டியுழை யிருப்போரு மிசைத்தனர் கேட்டலம்வந்து
மாண்டமணித் தவிசெழுந்து வளமனையின் புறம்போந்தான் .......................... (எ)

ஒய்யென நேடின்னிருள்சித் தொளிருமழற் பிழம்பெய்க்குஞ்
செய்யநிறத் துரவோனைக் கண்டனன் சேவடிவீழ்ந்து
வையமளிப்போன் பலகா லிரந்துரைப்பான் மறைவல்லோய்
பொய்பிறவத் துறையொழுகும் புங்கவபண் ணவரேறே ...................................(அ)

வறிதுமுணர்ந்தில னினது வரவுதெரியாதிழைத்த
சிறுமை பொறுத்தருள்கிலையேற் றீயேற்கு நீயன்றி
யுறுபுகலுண்டோ சாபமொழிப்பை நிலை தளராமே
பொறைமலிந்த பப்புருவின் புதல்வவென முநிவோனும் ...............................(கூ)

அருள்சார்ந்து சுமதியெனு மணங்கரசி யமைத்தளித்த
பெருகுசுவை யமிழ்தயின்று பெரிதுவந்து பகைமன்னர்
குருதிகுடித்தூன்சுவைத்துத் தசைகுதட்டுங் கூர்வேற்கை
நிருபனுக் குய்யுமா றோர்ந்திதனை நிசழ்த்துவான் ......................................(ய)

மறைக்கிழவர் விடுகடுஞ்சொல் வச்சிரமொய்ம்பினும் வலிது
பறைக்கரிது கழற்காலோய் பன்முறைவீழ்ந் திவண்வேண்டுஞ்
சிறப்புடை நின்னிலைகண்டு சிந்தைமகிழ்ந்தன மஞ்சே
லறத்தொழிலோ யிச்சாப மகலுமா றுரைத்துங்கேள்........ ... ............................(யக)

வேறு

உரவு நீர்க்கடல் சூழுலகத் திடைப்
பரமன் வாழ்கின்ற தானங்கள் பற்பல
விரவுவோர் பெரும் பாவங்கள் வீட்டுவ
பிரம சாபமும் போக்கும் பெருமைய ... ... ... ... ... ... ... ... ... ... ... (யஉ)

வீடளிப்ப வெவற்றினு மேம்பட்
டாடநின்றது நம்மாற் றணிந்ததொன்
றிடல்சைய மென்னுங்கிரிபிற்பிறந்
தோடுகாவிரித் தென்றிசை யுள்ளது... ... ... ... ... ... ... ... ... ... ... — (௪௩)

அந்தண்வையை யதன்வலப் பான்மலர்க்
கோர்துகுடுங் குழலங் கயற்கண்ணி
சந்தவெம்முலை மூழ்கு தடம்புயச்
சுந்தரேச னிருப்பதொர் தொன்னகர் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௪௪)

உலகமூன்று முறைசெல வீறுடு
மிலகுபொன் முளரித்தட மென்றெரு
நிலவுதிர்த்த முடைத்து நிகழ்த்துமவ்
வலர்பதிக்கிரு காதத் தளவையின் ... ... ... .. ... ... ... ... ... ... ... ... (௪௫)

திருநிறைந்த திருச்சுழி தோன்றுமவ்
வுருவநீணகர்க்கி யோசனை நான்கென
வளையுமெல்லையு மன்னுவ தத்தலம்
பிரதிகோச புரமெனும் பேரது... ... ... ... ... ... ... ... ... ... ... .. ... (௪௬)

ஆதிமங்கள தேவனமர்வது
பாதிவெண்பிறை யேய்ந்த படர்சடைச்
சோதியோரமை யத்தீர் சுரிகுழன்
மாதர்நோக்கின் மலைமகள் கேட்பவே ... ... ... ... ... ... ... ... ... ... ... (௪௭)

வேறு

இரகசியத்துனாத்தமையா லப்பெயர் விண்ணவர்முதலோ ரிசைத்ததென்ப
பிரதியெனவுத்தரமா மிரகசியங் கோசமெனப் பேசலாகுந்
தனைவலயத்தன்னதனு லுத்தரகோசப்பெயருந் தழைப்ப நீடுந்
திரையெறிதீம்புனற் கங்கை சூழ்கிடந்த காசியெனச் சிறந்ததன்றே .......... ... (௪௮)

தேனிமிரும் பொலன்பொகுட்டு முண்டகத்தோ னிறுதியினுஞ் சிதையாதும்ப
ரானவரியாவரு மடுத்து வணங்குவது பெரும்புகழ்வேட் டளிப்போர்போலக்
கானிமிருந்தருமுதல பருவம்வனா யாதலர்க் கா கனியுநல்கு
மானுமூவை கனுழனர வேனையவும் பகைதீர்ந்து மருவிவாழும் ... ... ... ... ... (௪௯)

மாசிலாமணி ஞானசமபந்தன் கருணைபொழி வதநங்கண்டோர்
பாசநோன்பிணி துரப்ப தெனப்புதியோ ரடைந்தவர்வெம்பசி நோய்மாற்று
மேசில்பா மடர்நைநடம் புரிசதுரவாக்கொடுநூ லெல்லைகண்ட
வோசைநாவலர் தொடுத்த தமிழ்த்தொடைபோல ணிபலவு முடையதம்மா.........(உ௰)

வேறு

பூதமுள்ளன யாவையு மின்பமே புணரப்
பாதுகாத்தலிற் பூரணி யப்பெயர் படைத்த
தோதுமத்தலத் துதவகதீர்த்த மொன்றுளது
வேதவேதியர் நிறைந்துபல் கணங்களால் விளங்கும்..................................(உக)

அங்கணு ணிருத்தாம்ப ரேச்சுர னெதிராக
மங்களேச்சுரன் சந்நிதி வடகுணபாலிற்
றங்குமற்றது காண் பளவையிற் றரியாது
பொங்குவல்வினைப் பாதகங் கதுமெனப் பேசும்..........................................(உஉ)

வெங்கதிர்ச்செல்வன் விரிச்சிகத் தியைந்த திங்களின்வா
யங்கவன் றினத் துதயவேலையி னதிபதியாஞ்
செங்கை யைர்துடைச் சிறுவனைப் பிரளயேச்சுரனைத்
தங்கைகூப்புபு தண்டுபோ னிலனுறத் தாழ்ந்து ...... ... ........ ........ ........(உ௩)

புநிதநெஞ்சொடு பிரம மந்திரத்தையுட் புகன்று
பனிமலர்த்தட மும்மடி வலஞ்செய்து பகுவாய்க்
கனைகடுங்குரன் ஞாழியூர் கடவுளை வழிபட்
டனுமதங்கொடு தண்டுலந்தில மறுகணித்து.........................................(உ௪)

யாவர் மூழ்கினும் பிரமசாபத்தினை யிகந்தோ
ராவரிம்முறை யப்புனல்படிந் துலகாளுங்
காவல் வெண்குடைநளனு முன்னகுடனுற் கலந்த
வீவில்புன்மையும் பெயர்த்தனன் வியத்தகு விறலோய்.................................(உ௫)

நம்மநுச்சையா னியிவ ணிங்கியங்கர்புக்
கிம்மெனச்சுரும் பரற்றுபூந் திருத்த நீரொய்தி
யம்மதிக்கணத் தினத்துறைத் தாங்கு மூழ்கினையேல்
வெம்மைசெய் கடுஞ்சாப நிற்பிரிவது மெய்ம்மை........................................(உ௬)

வேறு

ஐயமின்றிதற் கென்றுகூறலு மமர்கடந்தபூஉ மாளிமொய்ம்பினன்
கையமொன்றிப சவலைதீர்ந்தனன் மதிதெருண்டன னுவகைபூத்தனன்
செய்யசோலிறைக் கருளினன்வரஞ் செயிரில்கொள்கைமா தவர்குழாமுறை
சையகீடுபொன் னிமயமால்வரைச் சாரல்சென்றனன் முனிவரோரனன்... ... ... (௨௭)

சாபநீங்குமா றருள்வரங்கொடு தனதுகோயில்வாய் நின்றெழுந்தனன்
கோபவெங்களிற் றியானைமன்னவன் குமரகண்டனு முணர்வுமாழ்குபு
மாபெருஞ்சரிப்பலதிரஞ்செல வல்லைநண்ணினன் மறைமுழக்கரு
யூபவேள்வியிற் புகைவிசும் பருதொழுகுமுத்தர கோசமங்கையே............ ...(௨௮)

ஆசரித்தருள் விழிபடைத்தவர்க் கறிவினுட்பிரி யாதுநின்றமெய்ப்
போதரூபனை மங்களேசனைப் பூண்முலைப்பெயர்ப் பொம்மலோதியைத்
தீதகற்று மக்கிநிதிருத்தமாந் தெய்வநீரினைக் கண்டுகண்களித்
தோதவொப்பிலா மகிழ்சிறந்தன னுண்ணிறைந்தபன் முறைவிளம்புவான் ..... (௨௯)

முனிவரன்புகல் சாபநீங்குத லேதுவாசமுற் புரிபெருந்தவக்
கனிபயத்தினூழ் வலியினிப்பதி காண்டலாயதும்சவுமற்புத
மெனவுரைத்தனன் முந்துகூறியாங் கெரிமுளைத்ததண் புனலினுண்மூழ்கலுந்
துனிவிளைந்திடுஞ் சாபமொல்லைவெஞ் சுடர்முனள்ளிரு ளெனவகன்றதே........ (௩௰)

பின்னரன்புமீ தூரவெள்ளிவெண் பிறைமிலைந்தகம் பியைவிசேடமா
யின்னசைத்துவ ரிதழணங்குட னெண்ணிரண்டுபே சாரமேவர
மன்னவன்வழி பாடுசெய்துமெய்ம் மயிர்பொடிப்பவென் புருசமாரிபோற்
றன்னிணைக்கணீர்சலுழநெஞ்சகந் தண்ணெனத்தளிர்த் தெதிர்பழிச்சுவான் ........(௩௧)

வேறு

ஓமெனும்பதமாய் நகரமாய் மகரவுருவமாய்ச் சிகரமாய்வாவென்
றைமெழுத்துருவா யகாரமாய் நிற்போ யாயிரங்கண்ணமைமிடற்ற
னிமைதீர்த்தருளுஞ் சத்தியோசாததேவனே யகோர வான்மாவே
மீமிசைப்புலவோ ரிறைஞ்சுதற்புருட விச்சுவரூபனே சரணம் ... ...................(௩௨)

சவிசெழுவாமதேவ வேதியவீசானனே பராற்பர தரனே
கவிலருமங்கி கோத்திரரூப நலங்கிளர்மந்திர வடிவோ
யவிசொரிமகமு மதற்கதிபதியு மதுபுரப்பவனு மத்தொழிலு
முதுமொழிக்கிறையும் பதுமவீட்டுறையு முதல்வனுமாகியோய் சரணம்............ (௩௩)

எதிரறுமநந்த சத்தியோயொரு மூவெழுத்துமைந்தெழுத்துமாய் நிற்போய்
கதிபெறவிழைந்தோர்க் கருள்வநபதியெ சத்திருத்துவ பிரசேத
வதிர்வின்மந்திர வாஞ்சிசபவமும்மையம்பக புட்டிவர்த்தநனே
சதுர்விாதார ரூபசாதார தகுங்குணசொரூபியே சரணம் ..........................(௩௪)

தினிநடம்புயங்க ளாயிரமுடையோய் திரியுகசத்தியோய் சழல்சூழ்ந்
தணிசெழுமலர்த்தா ளில்லவபதங்க ளநேகமுள்ளவ கழைகுழைச்சு
மணிநிறமதனற் காய்ந்தவ்யமனை மாய்த்தவதக்கனை யடர்த்தோய்
பணிபணைத்துயின்ற கரும்புயலெழுவாய்ப் பணவாரிறைஞ்சுவோய் சரணம்.....(௩௫)

பெட்பிலோயணுவும் பெரிதெனச்சிறியோய் பெரியதுஞ்சிறிதெனப் பெரியோய்
கட்புலங்கவருங் கயிலைமால்வரையோய் கருணையின்னமிழ்துபெய் புயலே
விட்புலத்தொழுகுங் கனகதிர்ப்பரிதி வெண்மதியழலெழ விழிப்போய்
கொட்புறுபுரவி யிரவியோர்கோடி குழீஇயெனவிளங்குவோய் சரணம்..........(௩௬)

மறைநவிலநாதி போதகமகேச மங்களநாயக சரணம்
வெறிகமழ்கமலம் போலுநின்னடிக்கீழ் விழ்ந்தனன்பவக்கடல் வீழ்ந்தே
யறிவிலேனழுந்தா தெடுத்தருள்புரிநீ யல்லது களைகண்வேறறியே
னிறைவநிற்புகலென் றடைந்தனனென்று வேத்துபுநிலமிசைப்படிந்தான்........(௩௭)

பத்தியோடெழுந்து வரிகழலரசன் பாங்குநிற்றலு முலகீன்ற
தத்தரிநெடுங்கட் டையலோர்பாடைவாழ் சங்கரன்மகிழ்சிறந்தருள்கூர்ந்
தெத்திறத்தனபல் போகமும்விழைந்த யாவையு மெய்துமாறளித்துப்
பொய்த்தநமுடிவின் மறித்திவட்பிறவாப் பொருவறு செல்வமுங்கொடுத்தான் -(௩௮)

இன்னவையரும்பே றடைந்தவெள்ளிலைவே லிறைமகனறைமழை பிலிற்றும்
பொன்னவிரிதழித் தொடையல்வேய்மகுடப் புரவலன்றிருமு னிதனைப்பா
னின்னையான்பரவு மித்துதியாவர் நித்தலுநிலமிசைப் புகல்வோ
ரன்னவர்பிறவிவல்வினைமுதலவ கற்றுதல்வேண்டு மெம்பெருமான்..............(௩௯)

இணையிலோய் வெளிப்பட்டருள்புரிந்தனையே யென்னுறு தென்றனு மெரிவாய்க்
கணைதொடுத்தெயின்மூன் றெரித்தவிற்றடக்கைக் கடவுளவ்வாறு மாங்களித்தான்
பனைவிருப்பொடுமுப் போதுமித்துதியைப் பகர்பவ ரோர்மதியளவிற்
புணரிருடகுறும்பு மாயையும்வினையும் போக்கிமேக்குயர் கதிபெறுவார்........(...௪௰)

இடையருதுவனைப் பெருங்கிடையமுந்தி யேந்துசோட் டகெளிற்றுழவன்
குடநிறைபொழியாற் சுரபியாரொழுவாய் கோதறுவேதியர்கவர
வுடையதன்செல்வப் பெருநிதிக்கியைய வுதவினன் மங்கலேச்சுரற்கு
வடதிசைச்சிறிது மாருதபுலத்தின் வார்சிலை மூவிரண்டளவில்.........................(௪௰௧)

அருணடப்புரியும் பரஞ்சுடர்வலப்பா லேர்துவிற்கிடை யளவையினிற்
குரிசிலாங்கமைத்தா னென்றறித்துவச கூபமென்றதனினு மூழ்கிப்
பெருகுவான்புச ழெண்டிசைமுசமலப்பப் பெயர்ந்துதன் றொல்பதியடைந்தா
னிருநிலவனைப்பின் வல்லவர்யாரோ வியம்புவ ரினையசீர்நகரம்.......... ... .....(௪௰௨)

ஐந்தாவது அரித்துவசன்சாபந்தீர்ந்தவத்தியாய

முற்றிற்று

ஆசந்திவிருத்தம் உா ௰௯

ஆறுவது நளச்சக்கிரவர்த்திகலிவிமோசனமானவத்தியாயம்

வீரியணறத்தின்மிக்கோன் மேம்படுநீதிதேர்ந்தோன்
சூரியமதியிறுழ்ந்தோன் கூறுபல்கலைகள்வல்லோன்
பாரிடையுயிர்கண்முற்றும் பரிந்துகாப்பவனெஞ்ஞான்று
நேரிகர்தளிக்குமீகை நெடுநுகம்பூணடதோன்றல் ... .......................................(௧)

பூசுரர்குரவர்தேவர் பூசனையுவந்துசெய்வோ
னேசறுகுலத்திராச விருடிகள்குழுவின்மேலோன்
மூசுவெஞ்செருவிலேற்கு முனைக்குறும்பெறிவோன்வேட்கை
மாசொடுவெகுளியாதி மாற்றியுட்கரணம்வென்றோன் ...................................(௨)

சாந்தியன்பிறர்க்குமன்ற பயன்படுந்தாளோன்மாநம்
பாய்ந்தொளிர்கிளர்பொற்பூணிற் பரித்தவன்புவாமேறத்
தோய்ந்தசீர்த்தியன்றன்றொல்லை யரசியல்வழுவாதோம்பு
நாந்தகந்தடக்கைமிளி நளனெனுநாமவேந்தன் ...........................................(௩)

வேட்டையில்விழைந்தோர்வைகல் விட்டெறிகருங்காழ்க்குந்த
மீட்டுவார்வலைவன்பாச மியந்திரம்பிறவுங்கொண்டு
வாட்டமில்கடுங்கண்வேடர் மருங்குசூழ்தானையாசக்
காட்டிடைநடுவட்போந்து கபவலிமிகுநந்தேடி ... .................................. (௪)

வாகைவெண்பூவினண்ணல் வினைசெருப்பேனங்கூரம்
பாகமெங்கணும்போர்த்தென்ன முட்செறியழல்கட்செழல்
போருபர்ப்பீனைப்புன்சாயற் புதைமயிர்யாக்கையெங்கு
வேகவல்அழுவைவேறும் வெவ்விலங்களப்பிலாத ................................ (௫)

கண்டபின்றொடர்ந்தஞ்சூழ்ந்தங் கலைத்தெழுவித்துமொப்பிற்
கொண்டதிவகத்திற்சேர்த்துங் குறிப்பொடுவிளித்துயிர்மன்
விண்டுபோகாறுத்துமண்மேல் வீழ்த்துயிர்கவர்ந்துதேனும்
வண்டுமொய்த்தலமபுந்தாரோன் வாட்படைவயவரோடும் ................................ (௬)

நன்பகல்வேலைவெய்யோ னணிக்திர்வெயிலுங்காலும்
தன்புறவடிவிற்றீண்டத் தளர்ந்துதிப்பசியுள்வாட்டத்
துன்புழந்தழிந்துதேம்பிச் சுடர்மணிதெளித்தன்ன
மென்புனற்றடமொன்றெய்தி வீழ்சுவையடிசின்மார்தி ................................ (௭)

ஆங்கணோர்தருவின்மூலத் தயர்ந்தொருகன்னலெல்லை
வாங்குவிற்றடந்தோள்வீரன் மலர்விழிதுயிலுமெல்லை
யோங்குபாதபத்தினும்பர் நின்றுகீழ்வீழவூறித்
தீங்கடுவெறியும்பேழ்வாய்ச் சிறையிற்றரவுதீண்ட ................................ (௮)

காமருமுருவமோடிச் சுறுப்பமெய்வனப்பிற்றீரத்
தோமுறுகனவுகாணா வெருவுபுதுளங்காநின்று
தாபமுத்தலங்கன்மார்ப னெழுந்தனுஞ்சார்ந்தோர்யாரு
மேமவெண்கவிகைமன்ன வென்னைமற்றென்னையென்றார் ................................ (௯)

என்றலுங்கனவிற்கண்ட யாவையுமிசைப்பக்கேட்ட
நன்றறியமைச்சரோடு புரோகிதர்யாமவேலை
யொன்றுசொப்பனத்திங்கெய்தா தனுற்றுதல்வேண்டுஞ்சாந்தி
யன்றெனினிக்கண்வல்லே யடைவதுசரதமன்றே ................................ (௰)

வேறு

பரிதிகாண்பகலிற்றோற்று சொப்பனங்கள்பருவநீடாமலர்நிலையே
யிருவகைப்பயனுமளிக்கு மாதலினலிசைசெழுபெருந்திருவினரசே
யொருபொழுதெனினுமெல்லிடைத்து யிலாருறுவளிபித்தமிகுதாக்
கருதிருளிபங்குங்குன்றற் கூற்றிறகண்டபில்வழிக்கனவெய்தும் ................................ (௧௧)

நலிதரும்பிணியாற்சிந்தையாற் கனவுநள்ளிரவடுக்குமேல்விளையும்
பலனிகழ்கனவுவைகறை ப்பொழுதிற்படுமெருணேதயவேலைக்
குலவியகனவோர்திங்களிற்ப லிக்குங்கோதனம்விடுக்குமேல்வையினி
னிலவுறுகனவீணாந்துநாள்வரைப்பிற் பயன்றருநெடும்புவியளிப்போய் ......... (௰௨)

கழறுசொப்பநத்தினிலையினிது ணர்ந்துநண்டவர்சார்திறன்பாஙப்
பழமறைதெளிந்தோர்க் கியன்றவையளிச்சபசர்ந்தவைபுரிந்திலாரென்னி
னெழுவுறழ்புயத்தோய்நுகர் ந்தலாதொழியாதெண்ணருங்கனவிளைடயனென்
னொழுகொளிப்பொலம்பூட்புரவல ன்சேட்டுமேளமருண்டுவினைத்திரத்தால்........(௰௩)

இழைத்திலன்சார்தியாதலினெல்லையிழந்தனன ர சிய வுரிமை
வழுத்துசீர்க்கற்பினருந்ததியனையம ளைவியைமகவொடுந்தணந்து
சழைக்கரும்புடுத்தகவிழ்தலைச்செந்நெற் கழனிசூழ்மல்லனுடைசன்று
விழுப்புகழ்க்குரிசில்வெய்யகான டைந்தான்விதிவலியாவரேகடப்பார்........ .....(௰௪)

நாமுறுவநத்திற்றிரிதலுஞ்சின்ன ஊகுடனென்டவன்றடல்குடித்த
மாமுநிசபிப்பப்பெறுபதமிழந்துமைம் மிடற்றரவிறுன்டுறைவோன்
றாமவெம்படலைக்கடுங்கனல் வளைப்பத்தயருழந்தேந்தலைநோக்கிப்
பூமலிதொடையோயெனை யெடுத்திணாந்தடிப்புறம்போக்குதியென்றான் ........ (௰௫)

வேறு

என்றுகூறலுமருள்சுரந்தெடுத்தனனேந்தி
யொன்றுமுன்னிசழ்முறை யினெனன்பானெனவெண்ணிச்
சென்றுபாதவைப்பிறுதி யிற்றசவெனச்செப்பி
வென்றிமன்னவற்கேறனுன் போக்கிடும்வேலை ........................ ........... (௰௬)

கைதைமுட்செறிகூரெயிற ழுந்துறச்சடிப்ப
வுய்துகாட்டுமெற்றீண்டி யதென்னெனவுணாப்பப்
பொய்தவிர்ந்தமெய்க்கீர்த்தி யோய்தசவெனப்புகன்ற
செய்தியானினக்குதவியா மற்றதுதெரியின் ........................................ (௰௭)

எனமொழிந்தனனிடர்கோ னிணாந்துமூசசெறியுங்
கனல்சினப்பணிகதுவலின் மழுதுடல்கறுத்துத்
தனதுபோழகிழந்தொளி சாய்ந்தசில்பசலிற்
புனைகருங்கழலிருது பர்நன்பதிபுச்சான் ..................... ....................... (௰௮)

வேறு

நெடுமுடிமுற்றொருடர்சாபநீங்குதற்
கிடுமருப்பியானையூரிருதுபர்நன்பா
லடுதொழில்வாலுவனாகிவைகினான்
படியகத்தியாவரோர்படியினின்றுளார் ... ... ... ... ... ... ... ... (௰௯)

வேறு

எங்கொலிநீர்நிலம்புரப்போனிருதுபர்நனுடன்போகி
யாங்கணிகழ்சுயம்வரம்புக்கமுதொடுதோழமைக்கொண்டு
திங்கரும்பின்சுவைபயிற்றுஞ்சின்மிழலைத்தமயந்தி
பூங்கழைதோளிணைமீட்டுமெய்தினான்பொலன்பூணான் ... ... ... ... ... (௨௰)

வளங்கெழுதன்னாடடைந்துவளையாச்செங்கோலோச்சி
யிளங்கதிர்போலிருள்விழுங்குமெரிமணிவெய்யோன்முடியோ
னுளங்கவர்சொப்பனத்தின்விளைவுள்ளுபுதன்னுரிமையோடும்
விளங்கொளிப்பூட்புதல்வரொடுமெய்ந்நெறிசேரமைச்சரொடும் ... ... ... (௨௧)

வேண்டுபலபொருள்கொண்டுமேம்படுபுண்ணியத்தலங்கள்
காண்டுமெனவிழைந்தெழுந்தான்காசிகெயைசேதார
மீண்டுபுனற்பிரயாகையெழுதருஞ்சீராலவாய்ந்
தூண்டுபுகழ்க்காளத்தியோடவந்தியரித்துவாரமுமே ... ... ... ... ... ...(௨௨)

மாளவமமகதங்காக்கோலமதிவடிம்பேறு
நீளெயிலத்திநபுரம்பஞ்சபுரநீள்பொழிலிற்
காளமுகிலணவுபிரப்பங்காடுசுண்ணவனம்
வேளிறைஞ்சும்புள்ளிருக்குவேளூர்சோமேச்சரமும் ... ... ... ... ... (௨௩

வேறு

வீமவநமன்னேச்சுரமும்விரிநீர்த்தில்லிகாவநமுங்
காமர்கோரோச்சுரம்பிறவுங்கண்டுதொழுதாழ்வயத்தினாற்
றுமந்துயலுமணிமார்பன்சார்ந்தானுதிசிதம்பரமென்
றேமநெறிதேர்ந்தவருணாக்குமிலர்தைவநமாந்திருப்பதியில் ... ... ... ... (௨

அங்கணுறையுமறைக்கொழுந்தையாலம்பழுத்தமணிமிடற்று
நங்களமுதைப்பாதாளநாதன்றன்னையெமையீன்ற
திங்கணுதலானுதவதித்தேவியொடுகைதொழுதேத்தி
மங்குறவழுமாடநகர்வளமுங்காணாமகிழ்பூத்தான் ... ... ... ... ... ...(௨

உள்ளமுழுதுநின்மலமாயுடல்வெங்கலியால்விளைதிங்கு
விள்ளும்படிவாம்பரிமேதவேள்விமுடிப்பானங்கமொடு
தெள்ளுமறைநூற்றுறைகண்டோர்சிறப்பவிதியினனிதெரிந்தோ
ரொள்ளலிசந்தவொழுக்கத்தோரிசைமேம்படுமந்தணர்த்தொகுத்து ... ... ... (௨௬)

அன்னோர்மொழியின்வழிமதிக்கீற்றணிசெம்பவளச்சடைமுடியெம்
முன்னோன்வதியுந்தளிக்குணபாலும்மைக்கணைவீழளவின்கட்
டன்னேடுவமைபிறிதிகந்ததலனிற்பரிதிவடிவேழ்நைப்
பொன்னூடரவக்கழற்காலோன்பொருவில்புனைஞர்தமைப்பணித்து ... ... ...(௨௭

பலவுந்திருந்தும்படியொழுங்குபடைத்தாயிரர்தூணுடைத்தாகி
யலகிலமைந்தவேதிகைத்தாயணிகொள்சாலையமைவித்து
நிலவுதுளும்புசித்திலமுந்துகிருமணியுநெகிழ்பொலனும்
விலையினுழைநூற்றுகில்படடும்பிறவுங்கொணர்ந்துவேய்வித்தான் - - - - - - - - - (௨அ

விதியால்வேள்விவேட்பிக்குமேலோரோடுமேதவேள்ளாங்
குதிபாய்ந்தொழுகீர்ங்கவுள்வேழக்குழவியடித்தாமனாவனைங்கி
யதிராச்சிறப்பின்வாத்துவையுமருச்சித்துநடர்பொற்றூரணிந்தைங்
கதியாற்றிருந்தும்வயப்புரவிவிவெத்தீர்ந்தணைகலைவல்லோன் ... ... ... . - -(௨௯

கூனற்கருப்புச்சிலையநங்கன்குழைப்பக்குயில்கூப்பயிலுமிள
வேனிற்பொழுதிற்றிலனாய்விண்ணைமுழுதுமேய்ந்திட்டி
மோனத்தொடுவாம்பரியிவுளிபடிசபோருமுடித்தோமந்
தேனிற்பொலிபூர்தாரண்ணல்செய்தானிட்டிவினைசிறப்ப - - - - - - - - ... (௩௰)

யாணொளிராலருமணிப்பூணிழைநுண்கலிங்கத்தொடுபுனைந்து
சோணம்பதினாறுடன்விளங்குங்கொழும்பொன்யூபம்பலநாட்டிப்
பூணும்புரிநூலவர்முதலோர்புச்சோர்க்கிரவிமறைகாறும்
பேணும்பரிவினறுசுவையுண்பெரிதுமளித்தான்வரையின்றி ... ... ... ... (௩௧)

ஆண்டோன்றியவணிகழ்த்தியபின்னடுத்தவேனிற்பருவத்து
நீண்டசடையோன்மகிழ்பூப்பநெறியால்வையோமாதிகளு
மாண்டகுணத்தோன்புரிந்துபரிமகமுற்றுறதனுமொட்டாமை
பூண்டதிறத்தந்தனைநுவந்தான்புலவோர்பிறருங்களிகூர்ந்தார் ... ... ... ... (௩௨)

வேறு

மடங்கலேறனையான்வேள்விமுடித்தபின்வர்ந்நீர்த்த
மடைந்தவபிருதநானமாடினன்வேட்பித்தோர்க்குங்
குடம்புரைசெகுத்தனுகான்கொழும்பயிர்ப்பூமிசெம்பொ
னுடன்பலபொருளுமீந்தானுறுசலிக்குறும்புதீர்த்தான் ... ... ... ... ... (௩௩)

அவிரொளியோமவெந்தீயரணியிலொடுக்கித்தன்னூர்க்
கிவர்தருசருத்தனுகியிமையவில்லவனையவாங்கித்
தவளவெண்முறுவல்கோட்டித்திரியலர்புரமட்டோர்க்குப்
புவனமீரேழுமேத்தப்புரிவித்தான்விழவமன்னோ ... ... ... ... ... ... (௩௪)

செங்கதிரிடபத்தேயுர்திங்களிற்றிங்கட்செல்வன்
பைங்கதிர்க்கோடுகூடும்பக்கத்திற்புகர்தநாளி
லங்கணன்விதித்ததிக்கைபரித்தருட்பனுவன்முற்றிச்
சங்கையின்றுமுழுதுமர்திசைவரோனாவர்தம்மால் ..............................(௩௫)

எறுழ்வலிவிடைப்பதாகையேற்றுவித்தைம்மூன்றாய
வுறுதிதிநிறைவிற்றீர்த்தவுற்சவநிகழ்த்துவித்தான்
மறுகொடுவீதிகாண்பேர்வினைகலன்றிஞ்சம்பொற்று
ணறுமலர்த்தாதுச்சுண்ணநளிந்துபார்புதைந்ததன்றே . . ... ... ... ... ... (௩௬)

பைங்கமுகரம்பைசன்னல்பலமிடைந்தலர்பெய்தூநீர்
மங்கலகும்பம்பூத்தமாளிகைவாயிறோறு
மெங்கடம்முறுப்பிற்கேற்பவிவையெனத்தேற்றுவாரி
னங்கனுழ்மேனிச்செவ்வாயரிவையர்விரவிநிற்பார் .............................. (௩௭)

தண்ணறுஞ்சூதமீன்றதழைகுலாந்தோரணங்க
ளொண்ணிறப்பசியகிள்ளையொழுங்கினிற்பறப்பதொக்குஞ்
சண்ணகல்விசும்பினீடுகதலிகைப்பதாகையோடும்
விண்ணவர்குழுவுமும்பர்விலக்குவபோனுடங்கும் ... ... ...... ... ....................(௩௮)

வெளியனசெய்யவாகிவிண்டொடுசெவிசையீட்ட
மொளிகிளர்மதியம்வெய்யோனுருவுபற்பலவாயாங்கட்
களிவினைமுருகுசாண்பான்கலர்தனகளிப்பஞான்ற
தளிகதிர்முத்தமாலைதிரண்டதாரகைகளேய்க்கும் ........... ....................... ... (௩௯)

எழுகிறத்திபன்றமாதரொன்னிலப்படாமலீண்டுங்
குழுவெனும்பரவைவெள்ளங்கொழித்தெறிதரங்கமானும்
விழுமயிர்க்கவரிக்கற்றைவீசுவபடகம்பேரி
முழவுகாளங்களங்கீர்முழக்கெனமுழங்குமாலோ ... ... ... ................ ......... (௬௰)

காற்றிறைவரவுபொன்னங்கால்செறியாலட்டங்
தேற்றமேற்றிசையோன்போதல்சிவிறியுமறியார்பர்துஞ்
சாற்றவெள்ளிடையிலோவமசைந்தெனத்தளியின்வந்த
கோற்றொடிமகளிராடக்குழலளியாடுமெங்கும் ..................... ........ .. ... ... (௬௧)

குடையொடுகொடிபொற்றுமங்கொழுநிதிக்கலசந்தாங்கிச்
சுடர்மணித்தோரணங்கள் சூழ்ந்தொலிமணிசுடேங்கத்
டகிலேத்திரிபூண்டசருப்பதோபத்திரத்தேர்
படர்புவிகீண்டுசேடன்பரிப்பமேவியங்கிற்றன்றே ...... ............ ... ....... ... (௬௨)

இவ்வணிகழ்ந்தபின்னரொரிதளிர்தநணசெம்மேனி
மைவண்ணமிடற்றினர்க்குவழங்கினன்கோடிபைம்பொ
னுய்வண்ணநெறியிற்றேர்வோனுரியதன்றேயநண்ணிச
செய்வண்ணம்பிறழாச்செங்கோறிசைசெலநெடிதுவாழ்ந்தான் ... ... ... ... (௬௩)

இம்மையில்விழைந்தபோகம்யாவையுமமைந்தமைந்தர்
தம்முயிரப்புதல்வரோடுதழைத்திவணுகர்ந்துமுக்கட்
செம்மல்வாழுலகஞ்சேர்ந்தான்செருவலான்சரிதைசொல்வோர்
மெய்ம்மையாதரவிற்கேட்போர்வெங்கலிக்குடைவதின்றே ... ... ... ... ... ... (௬௪)

நளச்சக்கரவர்த்திகலிமோசநமானவத்தியாயம்முற்றிற்று

ஆ அத்தியாயம் ௬௰௪ திருவிருத்தம் (௨௱௫௬)

திருச்சிற்றம்பலம்

ஏழாவதுமங்கலபுரிசதுர்வேதபுரியானதுமுதலானபலசரிதையுணர்த்தவத்தியாயம்

பொருவிலந்நகரினித்தலு மறைதல்புரிபவர்முனிவரரநேகர்
தெரியினன்னவருட்சிறந்துளோர்வியாதன்கௌதமனெனுமெதாநந்தன்
மருளிலக்கிநிபன்கவுசிகன்வசைதீர்காலவன்வெப்பிருவென்போன்
விரிதருபுகழ்மார்க்கண்டனக்கிரசன்விச்சுவாமித்திரப்பெயரோன் ..................... (௧)

எல்கலில்பரத்துவாசனேசமதக்கினியிரதீதனெஞ்ஞான்றுங்
கொள்கையில்வழுவாவத்திரிகுசிலன்கோபிலன்மோகபார்க்கவனே
யுள்ளமைவாமதேவனேசுமதியுயர்கதிவிழைந்தினிதொழுகுந்
தெள்ளுசீர்ப்பரமயோகியென்றின்னோர்சிற்பராநந்தமேதிளைப்பார் ... ... ... ... (௨)

நின்மலன்சகளரூபமுட்குறிப்போர்நெறியினர்ச்சனைமகம்புரிவோர்
தொன்மறைத்துறைபோயாகமந்தெளிவோர்துரிசருந்தலத்திறுற்றுடைத்தோர்
பன்முறைதெரிமாணாக்கரோடவர்கீழ்ப்பயின்றுளாருடன்குழீஇயிருப்பப்
பொன்மதில்புடைசூழ்பதிசதுர்வேதபுரியெனவோசைசென்றதுவே ... ... ... ... (௩)

எரிவிழிப்பகுவாய்முடங்குளைமடங்கலேற்றையூரதிறற்காளி
கருமிடற்றிறையோடன்றுவாதாடுங்கடுசேவைபோக்குநல்குறித்து
வருபுனற்படப்பைசுற்றுமத்தலனின்மங்கைநாயகன்விழைந்துறையுங்
குருமணிவேய்ந்தகோயிலின்றென்பாற்குரோசமோரிரண்டளவயினில் ... ... ... (௪)

விதியுளியிலிங்கமியற்றுபுவழிபாடாற்றினன்மேருவில்வளைக்கு
மெதிரிலியுவந்துவேண்டியவரங்களீந்தனனேதமுமகன்றுள்
சதிரொளியிலிங்கமூர்த்தியுங்காளீச்சுரனெனக்காசினிவிளம்ப
மதிகிடந்தணையதிருநுதற்பெதும்பைவைகுவாளங்கணெஞ்ஞான்றும் ... ... ... ... (௫)

வேறு

நீதிபயில்கிரேதத்திற்பிரமபுரமெனப்புகல்வர்நெறியாற் பின்ன
ரோதுதிரேதையில் வெதிரிவனமென்பர் துவாபரத்தி னுலகமேத்துந்
தில்வியாக்கிரபுரப்பேர் செப்பிடுவர் கலியுகத்திற் செல்வநல்க
மேதருமங்கலபுரமென் றியம்புவரவ்வியன்பதியை முனிவர்விண்ணோர் ... ... ... (௬)

முன்னரொருகாலத் தொன்பதுகோளும் வக்கிரிப்ப முகில்பெய்யாது
பன்னிரண்டுவருடமழைவளங்கப் பெருங்கடலும் பாழிமொய்ம்பு
முன்னுசலந்தரனெனப்பே ருடையதோர் மண்டூகமாருத்
தன்னுருவத்தோடமணங் கமழலரிப் புலர்வேரித் தங்கிற்றன்றே ... ... ... ... ... (௭)

அன்னதன்மெய்ப் புணருறவாற் கன்னவீரமூலம்பூத் தப்போதப்போ
தின்னமிழ்து வானவர்க்கீந் தருவிடமுண்டோன்பூசைக்கேற்றதேனூர்
மன்னவனுண்மகிழ்ந்துவர மளித்தனனவ்வரத்தினால் வயவேந்தாயிற்
றுன்னலர்பொன்மகுடநிரைமணியழுந்துங்கனைகழற்காலுரவுவேலோன் ... ... ... (௮)

புலராத நறுங்கண்ணிக் கடவுளர்தானவர்சிருதர் புவிவாழ்வோர்
பலராலும் பிறராலும் விலங்குமுதலிய வுயிர்கள்பலவற்றாலு
மலவாதபெரும்பேறு பெற்றனமயா லெவ்வுலகு மலையாநிற்ப
மலர்மாதுமுலைதிளைக்குமருந்தன்முதல்விண்ணோர்க்குமம்மர்செய்தான் ... ... (௯)

ஆற்றாமலன்னோர்க ளலமந்து வெருவியயர் நாசம்பூத்த
நீற்றால்வெண்ணிலவெறிக்குஞ்செஞ்சுடர்மன்னனைந்துமறைநெறியாற்றாழ்ந்து
கூற்றுவிகுடித்தகுணாகழற்றாளோய்சலந்தரனைக்கொன்றீண்டெம்மைப்
போற்றெயென்றிரந்துரைப்பவஞ்சலியென்றருள்புரிந்தபூதநாதன் ... ... ... ... ...(௰)

புரையிருள்சீத்தொளிர்பரிதிக்கதிர்கோடியுதித்ததெனப்பொலிந்துதோன்றுஞ்
சுதரிசனநெடியோன்கைக்கொடுத்தவனால்விடுத்தானச்சுடர்கானேமி
மதவலியாருயிர்பருகியீண்டுமலைமகள்கொழுநன்மருங்குசேர்ந்த
ததனிலைதேர்பைந்துளவோன்மதிதவழ்புன்சடையோனையரிச்சித்தானால் ... ... ... (௰௧

ஆதரவினர்ச்சிப்பவுவகைகூர்ந்தெம்மிறையவ்வாழிநல்கச்
சீதரனெய்தினனுங்கட்சலந்தானுமற்பவத்திற்சிறைவண்டார்க்குந்
தாதவிழ்தண்மலர்கங்கைமுடிக்கேறமுயல்வினையாற்றக்கன்வேள்வி
பேதமுறச்சிதைத்தபிரான்வீட்டியபின்வீடளிப்பப்பெற்றான்மன்னோ ... ... ... ... (௰௨)

எறிசுறவக்கோட்டயிர்க்குமுள்ளிலைப்பச்சுடற்றாழையினர்ப்பொற்போது
வெறிகமழ்பங்கயப்பொகுட்டுவட்டவணைவீற்றிருந்தவிரிஞ்சன்வேண்ட
நெறிகருதொப்பரியாயுடன்படலால்வினைதோடநீங்கவெண்ணிப்
பொறியரவக்கங்கணன்வாழ்பதியிலம்மாசுபோக்கிற்றன்றே ... ... ... ... ... (௰௩)

வேறு

இடபமதியிற்பூரணையிலெறிவாட்பரிதிகுடபால்வெற்
படையும்போதிற்கபிலைபொழியுந்தீம்பாலோர்கலத்தளவு
குடவெள்வளையினிறைத்துமனுக்கூடுமலைக்கும்பல்லுயிரு
முடையபிரான்மங்கலநாதனுறைபுமிலிங்கமூர்த்தியினில் ... ... ... ... ... ... (௰௪)

ஆட்டியருளப்புரிவித்தோரவ்வேலையிலாங்கதிற்செங்கே
ழோடியெறிக்கும்பவளநிறமொருபாலோர்பாற்பச்சைநிறங்
கூடிவிளங்கவோருருவிற்கொண்டசோலமெதிர்காட்டி
யீடில்பெருமானருள்செய்யுமிதனுற்சித்தியனைத்துண்டாம் ... ... ... ... ... ...(௰௫)

முயலுந்தவமார்க்கண்டன்முந்தன்முனிவோர்களுநின்னனம்புரிந்து
கயலுண்கண்ணிவலப்பாகன்காட்சிகொடுப்பக்கண்கெளித்
தயர்வில்கொள்கைச்சிவன்முத்ராயிநறொன்றெங்குரவன்
பயிலுமிதனைநாத்திகர்க்குப்பகரோஜுனக்கப்பிறர்க்கென்றான் ... ... ... ... ... ...(கசு)

திருச்சிற்றபலம்

ஏழாவது மங்கலபுரஞ் சதுர்வேதபுரமானது முதலாணபலசரிதையுளைத்த
அத்தியாயம் முற்றிற்று

ஆ அத்தியாயம் எ க்கு திருவிருத்தம் உாஎஉ

அவது பார்ப்பதிதவம்புரிந்தவத்தியாயம்

கஙகைவார்சடைக்கடவுள்வாழ்கயிலைசாவலனைச்
சங்கையின்றுணர்மதியின்மேம்படுசநற்குமார
னங்கிதீர்த்தமான்மியமறைந்தனையதன்றேற்ற
மிங்குநீயெத்திசைக்கெனவவனுமாங்கிசைப்பான் ... ... ... ... ... ... ... ... [க]

சோதியுட்சுடர்ச்சோதியாயகண்டமாய்த்தோன்று
மாதுபாகன்முற்படைத்ததுமற்றதனும
மாதிகங்கையோர்காரணத்தாலனைத்துலகு
மோதுமச்சிநீர்த்தமென்றன்னதுமுணாப்பாம் ... ... ... ... ... ... ... ... ... [உ]

ஐந்துமாறுமிருடிகளாயிரரிறையோன்
முந்துபோதிப்பமுழுதுணர்ந்தவர்தவமிழைத்தற்
குந்துசீர்த்தலஞ்சிறந்ததொன்றுள்கினர்தணவா
தெந்நைகோயிற்குதிருதிகோணத்திடையிருந்தார் ... ... ... ... ... ... ... ... ... [ங]

காலம்பற்பலகழியநோற்றொருபூகுமக்காலே
ஞாலநாயகன்முநிவரர்பார்த்திவைாவில்கா
னிலவாட்கண்மங்கடோதரிபெருட்டேணிறத்த
வேலைசூழிலங்காபுரத்தெய்துதல்வேணடும் ... ... ... ... ... ... ... ... ...(ச

ஈங்குநீவிர்வைகுதிரெறுவெழுநருமுறையை
யாங்கண்மாசறுமறிஞர்கைக் கொடுத்தனனங்கேர

நீங்குசெய்தொழி லிராக்கதர்செறிபுலஞ்சேறல்
பாங்கில்போதகப் பாங்குகொலென்றனர்பரமன் ... ... ... ... ... ... ... ... (ரு)

ஆதவன்புகாஅதெயில் வளம்பதியரசுக்
கியாதொர்வேலையி னம்முருத்தீண்டுதலினையும்
போதவிழ்தணி யித்தடங்வேனைப்போது
கோதில்கொள்கையிர் கொழுந்துவிட்டழற்பிழம்புதிக்கும் ... ... ... ... ... ... (சு)

என்றுகூறிமற்றவர்களி னிங்கினனெரிபோற்
குன்றுபோலுயர் கொடிநெடு மாடநீடிலங்கை
சென்றுபுக்கனன் சிறைச்சுரும்பரற்றவண்டலம்பு
மன்றலுறுசில் லோதியைமணந்தவண்வதிந்தான் ... ... ... ... ... ... ... ... (எ)

ஆயவேலையினரக்கர்கோன் மூடிவெயிலெறிப்பத்
தூயவாளெயிற்றிளம்பிறை சுடர்நிலாவிரிப்பக்
காயமாயிருள்பரப்டவந் தனைதுகாணுத்
தாயனுன்பசுங்குழவியா யினன்றசமுகன்முன் ... ... ... ... ... ... ... ... (அ)

கண்ணுநெஞ்சமுங்கவர்வனப் புடையபாலனைக்கண்
டுண்ணெகிழ்ந்தனன் மைந்தனியாரெனவுயிர்த்துணைவி
தண்ணறுங்குழற்றுபத மடர்நைதர்தகன்று
ளண்ணல்யானையாயருள்பெறற் புதல்வனையென்றான் ... ... ... ... ... ... ... (கூ)

பொழியுமைப்புயன்ஞாயிறுதநீ இப்பொலிர்ததுபோன்
றெழிலின்மேம்படுசிறுவனை யெடுத்தனன்மடிவைத்
தொழுகுகாதலினுவந்தனனவன்றேர்மனைவிற்
கழிபெரும்புகழ்தீர்த்தத்தினெழுந்ததுகனவி ... ... ... ... ... ... ... ... ... (ய)

படரொளித்தழல்காண்டலும் பயிலருந்தவத்தோ
ரடையவீழ்ந்தனரவ்வெரி நாப்பணுண்டொருவர்
தடையில்கல்வியின் முதியவர்தநவினுலிளையர்
கிடையில்வேதியர்குலத்துளார் கேள்வியிற்சிறந்தார் ... ... ... ... ... ... ... (கக)

வணங்கும்வாயினரொடுங்குமுள்ளத்தினர்மண்மீ
துணங்குசெப்தியாமாணிக்கவாசகரென்பார

குணங்கொள்புத்தகநிலத்தில்வைத்தால்வருங்குறையேன்
றுணங்கியீதுநாமோம்புதல்கடனெனக்குறித்து ... ... ... ... ... ... ... ... (௧௨)

செய்யதீத்திரளுடுபுக்கிலர்தெளிபொருளா
மையனல்கியதிருமுறையங்கையினீங்கா
துய்யவையகநெடிதுநாளுறைந்தனரிசைத்தேன்
மொய்யலர்த்தடம்பொய்கையின்மூரிவாய்க்கனாயின் ... ... ... ... ... ... ... (௧௩)

வேறு

கொழுநனுமகனுமாவான்கோதிலாமனையாட்கென்னு
மொழிதெரிவிப்பாள்போலமுதுதவவநிதையாகி
யெழினலங்கழிந்தமண்டோதரியுழையெய்திமைதோய்
விழியுளமகவாய்வைகும்விடைவலாற்கொண்டுபோனாள் ... ... ... ... ... ... (௧௪)

வேறு

தொள்ளாயிரத்துத்தொண்ணூற்றொன்பதின்மர்சூழுஞ்சிகையனலி
னுள்ளாய்விழுந்தோர்க்கவ்வயின்மங்கலலிங்கற்குத்தரபாலிற்
கள்ளார்முளரித்திரளலர்த்துங்கதிரோகோடிபுணாவடிவும்
விள்ளாவவிச்சையிருள்கரப்பவிளைபுன்முறுவற்றிருமுகமும் ... ... ... ... ... (௧௫)

உடையோனாகிமுழுமுதல்வனுவவுமதிபோன்றொளிர்வதன
மடவாளொடுமெதிர்நின்றுவந்தேகாட்சிநமக்களிப்பக்
கடைபோந்துறைவீரெனவிளம்பக்காட்சிகொடுத்தநாயகனென்
னுடல்வெள்ளேற்றேற்றொருநாமமன்றுதொடங்கிநடந்தே ... ... ... ... (௧௬)

உருவவனப்பின்வீக்கத்தாலொலியல்வெய்ந்துநெறிபயின்ற
சுரிமென்குழலுஞ்சுந்தரநாயகியென்றோர்பேர்சுமந்தனளாற்
கருணைசுமந்துபன்னுமறைக்கனிவாய்விண்டுநம்மொடியோந்
திருவினூற்றுப்பத்திலிங்கமூர்த்தமாகித்திகழ்ந்துறைதும் ... ... ... ... ... ... (௧௭)

ஈண்டையிலிங்கமாயிரமுமெல்லாவுலகுமீக்கூற
மாண்டசிறப்பிற்பொலிந்தோங்குமலர்த்தாள்பணிந்துதெரிசித்தோ
ராண்டுபெருமாறனைவோர்க்குமளித்துஞ்சாரூப்பியமென்று
நீண்டுபுரிந்துபோற்றருவீழ்நினைத்தாங்கொளிரும்படர்சடையோன் ... ... ... (௧௮)

பொருணூல்பொறித்ததிருமுறையைப்போற்றல்குறித்துவீற்றிருந்த
மருணீங்குணர்வின்மாணிக்கவாசகனையெம்மிறைநோக்கி
யிருணீர்வெலிஞாலத்தில்யாம்வாழ்தலங்கடோறுமடைந்து
தெருணீர்மொழிச்செய்யுளிற்புகழ்தல்செய்தியதன்பின்னோர்பதியில் ... ... ... (௧௯)

தோன்றுபடுமும்மலநீக்கித்தோன்றாத்துணையினருள்வெளிபட்
டென்றுமுலவாப்பேரின்பத்திரண்டுமொன்றுமறத்திளைப்ப
நன்றுமுயர்வீடருள்வமெனநவின்றனகல்வாணுழைமறைந்தா
னன்றுதொடங்கியத்தீர்த்தமங்கிதீர்த்தமாயதுவே ... ... ... ... ... ... ... (௨௰)

வேறு

ஆறுமலவ்வயினின்றநந்தநட்டஞ்செயலாற்
கூறுர்பிறைச்சென்னிக்கூத்தனெனும்பெயர்படைத்தான்
மாறுர்கரத்தினன்வாமபாகத்துறையும்
பூசாறுமென்கோதைபூணர்வனமுலையே ... ... ... ... ... ... ... ... ... ... (௨௧)

ஆடல்புரிமூர்த்தியாலயத்தினேர்கீழ்பா
லீடில்புகழ்மங்கைநாயகர்க்கீசாநத்திற்
றேடுகமழ்தார்ச்சுரர்பதிபோர்தைம்படையோன்
றெடுமுளரித்திருப்பதங்களர்ச்சித்து ... ... ... ... ... ... ... ... ... ... ... (௨௨)

கோதமன்முந்திட்டகொடுஞ்சாபந்தீர்ந்தொழிந்தான்
மேதகுவின்காப்போன்விமாநமுளதின்னும்
காதணிவெண்சங்கக்கடவுள்வடபாலிற்
றீதாவும்வந்நிதீர்த்தத்தின்மேல்பாலின் ... ... ... ... ... ... ... ... ... ... (௨௩)

தண்ணென்கமலச்சததளப்பொற்கோயிலுறை
யண்ணலிராதந்தரகற்பத்தந்நகர்புக்
கெண்ணின்மலியுமிராசத்தோடந்தீர்வான்
வண்ணங்கிளரிரவிவார்சிலைசேர்திங்கடனில் ... ... ... ... ... ... ... ... ... (௨௪)

மூதுணாயிலிந்துமுயங்குமூவைந்திதியிற்
றீதிறிருவாதிரைவிரதந்தேர்ந்தாற்றி
மாதரரசிமலையனாயன்பாவையென
வோதுமுலகின்றூட்கூஞ்சல்விழாக்கற்பித்தான் ... ... ... ... ... ... ... ... (௨௫)

செய்யபவளத்திரள்காலில்வெண்ணிலவு
பெய்யுந்தாளவுடகாண்பிணித்தொளிகா
லையபசும்பொற்பலகையமைத்தமிழ்திற்
றுய்யதமிழ்மதுரத்துச்குமெடுத்திசைத்தான் ... ... ... ... ... ... ... ... ... (உசு)

சாறுதொடங்குத்தலைஞான்றுதொட்டிகலே
றேறுமிறையோனுமெவ்வுயிர்க்குமின்னருள்செய்
பார்வையுமையாளும்பங்கயப்பூம்புனறோய்ந்
தார்வமுடனந்தத்தவபிருதமும்படிந்தார் ... ... ... ... ... ... ... ... ... ... (உஎ)

அப்பரமதீர்த்தமறிவுக்கறிவாய்
வொப்பிலிதன்கோயிற்குணபாலோரம்பளவின்
மைப்புறவண்டார்ப்பவநசத்தொடுதோன்றுஞ்
செப்பரிதாம்மாலதன்பெருமைதேறுங்கால் ... ... ... ... ... ... ... ... ... (உஅ)

வேறு

மைக்கயல்போற்பிறழ்ந்துவடிவாளெனநீண்டகன்றுவரிசிதறிமதர்த்தொழுகுமழைத்தட்
[ங்கட்கவுரி
தக்கன்மகளெனவுதித்துச்சதியெனும்பேர்புனைந்துதனிமுதல்வனொடுகலந்துதணப்பறவா
[ழ்காலை
மிக்கதிறலுறுவலியோனெச்சவினைபுரிந்தான்விரிதுழாய்த்தழையலங்கல்விண்டுமுதலி
[மையோர்
இக்கிலுறைபுருகூதன்முதலுலகபாலர்தெளித்தமறைவியாதன்முதலிருடிகளுந்திரண்டார்
(உகூ)

சுமந்துமுதலோர்பிரமவாதியருந்தொக்கார்தொல்லுயிர்கட்கதிபதியானெனத்தன்னைவிய
[ந்து
நிமிர்ந்தபுரிசடைமுன்றினிலவெறிப்பமிலைந்தநிமலனையும்விமலையையுமதித்திலன்புன்ம
[தியாற்
கமழ்ந்துகுறிநெறிபயின்றநெடியகுழற்கங்கன்மகத்தொனகளாயாமலிருப்பவுமுக்கணற்
பார்த்
தமைந்தவுணர்வினர்க்கெளிதாமருஞ்சுடரோயெந்தையாற்றுமகங்காணியநீயெழுந்தருளல்
வேண்டும் (௩௰)

அன்றெனின்மற்றெனையேனுமாங்கடையவிடுத்தற்கருள்செயெனவிரந்துரைப்பவண்ண
லருள்செய்யான்

குன்றுறழுந்திணிதடந்தோட்பிரமதர்கள்குழக்குவிமுலைக்கொம்பெழுந்தபுறம்போந்து வ
ழிக்கொண்டு
சென்றுபுகுந்தனள்யாகசாலையறிவிழந்தசிறுவிதியுமவன்மனையுங்குழீஇயவரெல்லோரும்
பொன்றவழ்பூம்பசும்பெடையைநல்வரவும்வினவார்புகன்றிலர்வேறொருமொழியுமிகழ்
ந்தனர்தீவினையால் (௫௧)

வேறு

அன்னவரிகழ்ச்சிநோக்கியதமுதகுகுதலைத்திஞ்சொல்
மின்னடுநுசுப்பிற்பாவைவெருவருவெகுளிமீக்கொண்
டென்னையாளுடையோன்பக்கலெய்தவமஞ்சியெஞ்சாத்
தன்னுருவொழித்தாண்மூலத்தழலெழிஇயாங்கண்மன்னோ ... ... ... ... ... (௫௨)

பைந்தொடிமடந்தைபின்னர்ப்படர்ந்தபாரிடத்தர்மீண்டு
வந்தவணிகழ்ந்தவண்ணமழைவண்ணமிடற்றோற்கோதக்
கந்தடுபுழைக்கைகால்வாய்க்கரியுரிபோர்த்தோன்சீறி
வெந்திறலடலின்மிக்கவீரபத்திரனையேவி ... ... ... ... ... ... ... ... ... (௫௩)

மேல்வினையுணராத்தக்கன்வேள்வியைத்தகர்த்தன்னோனைப்
பால்வளைத்தறுகட்சேனைப்பரப்பினையவிவேட்டுன்னை
வால்வளைச்செங்கைமாயோனாதியாவதிந்துள்ளோரைக்
கோல்வளையரசன்கீழ்வாழ்குடியெனநடுக்கமாட்டி ... ... ... ... ... ... ... (௫௪)

இன்னிசையருவிதூங்குமிமையமால்வரையினண்ணி
யுன்னரும்பொருளாய்நின்றோன்யோகில்வீற்றிருந்தான்பல்யாண்
டன்னமென்னடைப்பைங்கிளியனையவள்சயிலவேந்தன்
முன்னயர்தவத்தால்வந்துமுளைத்தனள்புதல்வியாகி ... ... ... ... ... ... ... (௫௫)

அணிகிளர்பருவச்செவ்வியடைதலுமிசைவன்றேப்
பிணிமுறுக்கவிழுங்கொன்றைப்பிணையலாழ்மார்பன்வேட்டு
மணிவடஞ்சுமந்துவீங்கிவம்பறுத்திளகுங்கொங்கைத்
திணிமருப்பியானைசேரத்திருந்துதோளெழுவிற்சேர்த்தான் ... ... ... ... ... ... (௫௬)

பின்னரெங்கடவுளோர்நாட்பெய்வளையணங்கைநோக்கி
யின்னரம்பனையசொல்லாயெம்மொழிமறுத்துநந்தை
தன்னமருறையுண்முன்புசார்தலாற்றவறுண்டாந்தப்
புன்னவைதீர்ப்பான்மண்மேற்போந்தருச்சித்தல்வேண்டும் ... ... ... ... ... (௫௭

அன்றெனிற்கரிசுநீங்காராயிரஞ்சிகரக்குன்றிற்
றென்றிசைமருங்குராவற்றீவினோர்தலஞ்சிறந்த
தொன்றுனச்சுரதேசிப்பவுத்தரகோசமங்கை
யென்றொருபெயர்மேலெய்துமிணையிகந்துயர்ந்ததென்றும் ... ... ... ... ...(௪௮)

வேறு

இக்காலையிலந்தைவனமெனத்திசைபோய்விளங்குவது
மைக்காவியெதிர்கடந்தமதர்விழியாயப்பதியிற்
புக்கார்யத்தொடுசெம்மைப்போற்றியருச்சனைபுரிவாய்
மிக்காயவிண்ணோர்யாண்டினினாம்பானிகழளவும் ... ... ... ... ... ... ... (௪௯

என்னவுரைத்தனனிறைவனிறைவளைக்கைமட்டவரனு
முன்னிகழ்ந்ததுட்கொண்டுமுழுமுதல்வன்மொழிதலைக்கொண்
டன்னகரியினிலடைந்தாளமுதறள்திங்கணிபொதளித்
தன்னிகர்ப்பதோரிலந்தைதாபித்துவளர்த்தனளால் ... ... ... ... ... ... ... (௫௰)

மாதரிளம்பிடியன்னாண்மயாநத்துநட்டம்புரியு
மேதமிலியுறைகோயிற்கீசாநகோணத்திற்
போதவிழ்ந்துமணங்கமழும்புண்ணியதீர்த்தடமைத்தாள்
சீதளமென்றதனுமங்கைதேவிதீர்த்தமுமென்ப ... ... ... ... ... ... ... ... ... (௫௧)

பகருமதன்குணபுலத்திற்பன்னசாலையுமிழைத்து
நுகர்வனயாவையுந்தவிர்ந்துநுகருணவுவளியாதி
யிகல்வெகுளிப்பகைசாடியிந்தியப்புன்குறும்பெறிந்து
நகவெருடுநோற்றருவுருவாந்தலைவனையுமருச்சித்து ... ... ... ... ... ... ... ... (௫௨)

அவ்விலிங்கமுழுமுதலுக்கமைந்தபூண்முலையாளென்
றெவ்வுலகுமெடுத்தேத்துமிறைவியையும்வழிபட்டேக்
கவ்வைவினைநவைதீர்ந்துகண்ணுதலோன்மகிழ்பூப்ப
நவவிழிமுன்புபோனலஞ்சிறப்பவொழுகினள் ... ... ... ... ... ... ... ... (௫௩)

ஈங்கிவள்பேர்பூண்முலையாளெனத்திசைபோய்விளங்குவது
வீங்குபுனற்படப்பைகுழப்பதியின்மெய்ப்பொருளா
யோங்குசுடர்ஞானநாயகரிட்டபாலுறைகின்ற
கோங்கினமுலைக்குயில்கண்டகுளிர்சிறப்பாசிலையிலந்தை ... ... ... ... ... ... (௫௪)

ஆதியுகமெனுங்கிருதத்தல்லாமலதன்பின்ன
ரோதியமூன்றுகத்தினுந்தேனுறைக்குநறுமலர்க்குருந்தத்
தாதுகமழ்பொலந்தோட்டுச்சண்பகமூர்தேருருள்போற்
போதுவிரிந்தளிமுரலும்பூமகிழுமாமந்தோ ... ... ... ... ... ... ... ... ... ...(௪௫)

வேறு

தமரிற்றுறந்தோருளத்தென்றுந்தணவாமங்கைப்பெருமானைக்
கமலப்பொகுட்டில்வீற்றிருக்குங்கடவுண்முன்னமருச்சித்தா
னிமையமீன்றதொடிவளைக்கையினையாள்வழிபட்டனள்பின்ன
ரமிழ்தக்கடலிற்பிறந்தகரும்பதற்பின்னூராதனைபுரிந்தாள் ... ... ... ... ... (௪௬)

அன்னநிலைமையிருடிகடேர்ந்தழியாமுதலாய்ச்சயம்புவாய்ப்
பன்னவரியநின்மலமாய்ப்பயிலுஞ்செகசாரணமாகி
மன்னுமிலிங்கமூர்த்தமாய்வைகுமிலந்தைவாக்கனியை
யின்னலறுக்குமருமருந்தையிச்சித்தினிதுபூசித்தார் ... ... ... ... ... ... ... (௪௭)

யாகவினையிற்றியானத்திற்சமாதியோடெண்வகையாய்
யோகநெறியிலருந்தவத்திலுஞற்றும்பரிசாரகத்தொழிலின்
மாகமனைத்துங்கமழ்நந்தாவனத்திலதிதிபூசனையின்
மோகமறுக்கும்வேதாந்தமொழியினயிட்டிகாதிகளின் ... ... ... ... ... ... ... (௪௮)

இறையோனுவப்பவொழுகுவாரியாமெயுணர்க்குமவர்சரிதை
பொறைமேற்சயம்புத்தானதிற்பொலிந்துதோன்றுமந்நகரி
லறைவாய்க்களித்தபசுஞ்சாகமளிப்போர்பெறும்பேற்றுசுவையுங்
குறையாதயவூர்ப்புறத்திருந்துகொடுப்போர்க்செய்தல்கூடாதால் ... ... ... ... (௪௯)

வேறு

மருதியொட்டறநிவந்தபன்மாளிகைபுடைசூழ்
பொருவிலத்தலத்தோர்சதைபவகிமுன்புகலு
மொருவனந்தணனயிட்டிகமெனுவிரித்தெழுதாச்
சுருதிநூல்கரைகண்டவன்சிவார்ச்சனைத்தொழிலோன் ... ... ... ... ... ... (௫௰)

விதியின்மந்திரமுணர்ந்தவன்விதிமகஞ்சிதைத்த
சிரன்மங்கலநாயகன்றுமனையடிக்கீழ்

முதிருமன்பினன்சாகமேறுசர்பவன்முறையா
லதிதியர்க்குமுன்னளிப்பவனாடொறுமன்பால் ... ... ... ... ... ... ... ... (ருக)

அதிகசுந்தரனென்னப்பெயர்போய்வணமலன்
வதியுங்கோயிற்குவாசவன்புலத்திலம்பிரண்டு
பதியுமெல்லையினியற்றியபன்னசாலையினி
னெதிரில்கொள்ளைசையில்வைகினனெடிதுநாளென்ப ... ... ... ... ... ... (ருஉ)

ஓதுமேல்வன்மழைபொழிபருவத்திலோர்நாட்
சீதவெண்பிறைமிலைச்சியசெஞ்சடைக்கடவுட்
பாதபங்கயமலர்த்துணைபரிவினர்ச்சித்து
மேதருந்தனதுறையுள்வாய்மீண்டனனடைந்து ... ... ... ... ... ... ... ... (ருங)

பாவருந்தியாமத்தினிடமர்ந்தனன்பகல்போ
யிரவிளையிரண்டிறந்தனகன்னலவ்வெல்லை
யுரவுவெம்பசியனற்றவுள்வெதும்பிவான்கொண்டல்
விரவுதண்டுளிகளைப்பமெய்வருந்தியோர்மறையோன் ... ... ... ... ... ... ... (ருச)

எசிலசெய்திகனிபாடிகனென்பவனெய்தா
மூசணைந்தழைச்சாலைநீள்வாயிலின்முன்னி
யாசுநல்குநல்வேள்விமீண்டிடமெனவழைப்பத்
தேசினுருபருந்தவன்சமாதியிற்றீர்ந்தான் ... ... ... ... ... ... ... ... ... ... (ருரு)

பொருக்கெனக்கடைப்புறத்தணைந்தனையவற்காணுத்
தருக்குமாதரவொடெதிரெழுந்துதாள்விளக்கித்
திருக்கொள்பாசிலைச்செழுமனைக்கொண்டுபோந்தொருசா
திருக்கையிக்கினிதிருத்திநல்வரவுகேட்டதற்பின் ... ... ... ... ... ... ... ... (ருசா)

சாமுன்னியதனக்கிருந்தவிலருந்துகெனப்
பாகமின்சொலோடளித்தனனுசர்ந்தவன்பசிதீர்ந்
தோகைபெய்தினனெய்தலுமுணர்வினுக்குணர்வா
டேகநாயகனுவந்தனன்யாவையுங்களித்த ... ... ... ... ... ... ... ... ... (ருஎ)

எதிர்வதிர்ந்திரதமாருமெறிமடிசி
லாதிநால்வலோர்க்கருள்பவர்க்காம்பலங்கட்கே
சோதில்சாகவுண்கொடுப்பவர்பெறிலறுசுவையூண்
காதலாலளிப்போர்ப்பயன்யாவரேகணிப்பார் ... ... ... ... ... ... ... ... ... (ருஅ)

குரும்பைபோற்கிளர்குவிமுலைக்கௌரியோடனுகிச்
சுரும்புசூழ்மலர்க்கொன்றையோன்சொன்னவோசையினு
லரும்பெறற்சிவஞானபோதங்கொடுத்தகன்றான்
விரும்புநன்னெறிவேதியனிலையையார்விரிப்பார் ... ... ... ... ... ... ... ... (௫௯)

பின்னருஞ்சிலநாளவணுறைந்துபேருலகின்
மன்னுயிர்த்தொகையடங்கலுமருண்ஞேகைவிதிர்ப்பப்
பன்னருந்தனதுருவநீங்கலும்பசுபோதத்
துன்னரும்பரம்பொருளொடுகலந்தனனுரவோன் ... ... ... ... ... ... ... ... (௬௰)

எட்டாவதுபார்ப்பதிதவம்புரிந்தவத்தியாயமுற்றிற்று

௮ அத்தியாயம் ௮க்கு விருத்தம்—௫௱௬௰௨

## ஒன்பதாவதுமணம்புரிந்தவத்தியாயம்

நலமலிசிரிம்பினிநாடுசெய்தவப்
பலனெனவையையின்பாங்கரோங்கிய
பொலன்மதின்மங்கலபுரியின்கீழ்புலத்
தலகுசால்குரோசமூன்றகலுமெல்லையின் ... ... ... ... ... ... ... ... ... ... (௧)

புல்லனையெனுநகர்பொலிந்ததெத்தொழில்
வல்லதெய்வச்சிலைமாயன்வைகுவான்
சொல்லருமதன்குணதிசையிற்றோன்றிடுஞ்
செல்லறீர்சக்கரதீர்த்தமென்பது ... ... ... ... ... ... ... ... ... ... ... (௨)

பார்ப்பினுந்தீண்டினும்பரிந்துமூழ்கினும்
பேர்ப்படுபோகமும்பேறுநல்குவ
தோர்ப்பினற்காவதமொழியிற்பூருவத்
தார்ப்பறுக்கடலிரண்டருகுசூழ்வது ... ... ... ... ... ... ... ... ... ... ... (௩)

பலர்புகழ்கந்தமாதநபருப்பத
நிலவுவதத்தலைநெய்த்தவார்குழன்
மலைவளர்காதலிமருங்குவைகநின்
றிலகொளிபரப்புவதிராமலிங்கமே ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௪)

வேறு

மண்டிரைமுழங்குபயவாரியினுஞ்சங்கமிப்ப

துண்டுதனுக்கோடியெனவோர்தீர்த்தவத்தீர்த்தங்
கண்டவருமுயர்வீடெனன்பர்மழு றிபேர்து
மண்டலுறைவெதிசிவநத்தணிசெழுபச்சியதிரையில் … … … … … … … (௫)

காதநான்களவின்முனைக்கழுறுதிருச்சுழிதோன்று
மோதிலநன்றுடபாலியோசனையோரிரண்டளவின்
மாதரரசங்கயற்கண்வல்லியுடன்பிரியாது
வேதமுதநூறைகூடல்வியன்பதிமுற்புகன்றதால் … … … … … … … … (௬)

இத்தலங்கள்புடைதிகழவிடைதிகழ்மங்கலபுரியா
மத்தலனிற்றென்றிசையிலெந்துகுரோசத்தளவின்
மெய்த்துபுகழ்வேதவியாதாச்சிரமமிகவிளங்கு
மூய்த்துணரிலதனளவையோர்கூப்பிடென்பனவே … … … … … … … … (௭)

வேதவியாதாச்சிரமமென்னவுமவ்வியன்பதியை
யோதுவர்மூன்றெல்லைசெலினுத்தரதிக்கினிற்றோன்றும்
போதவிழ்ந்துமுருகுயிர்க்கும்பூம்பொழில்சூழ்ந்தொருநகர
மேதமில்சீர்ப்புநாவாவெனுமரசன்கண்டதால் … … … … … … … … … (௮)

வேறு

இவ்வுலகத்திராசமாணிக்கசதுர்வேதபுரமெனப்பேர்பேசய
தவ்வயினந்தணனொருவன்மும்மைவேலையும்புன்மீறுயர்தங்கியோம்பிக்
கவ்வையறுத்தருள்குரவனடிபேணிப்பணிபுரிந்துசனைநீர்வேதஞ்
செவ்வனுணாத்தின்னணநாட்செலச்செல்வோன்மகப்பெறுசிந்தைசெய்தான் … (௯)

பொன்போலும்பெறலரியபுதல்வனையும்புதல்வியையும்புரிந்துமாறு
வன்போடிலந்தைவகத்தனைந்துவிடம்பழுத்தமிடற்றமுதைநோக்கித்
தன்போடுத்தவம்புரிவோன்கௌமாரதீர்த்தத்திற்சூர்மாவீழ
முன்போரிலடர்த்தபிரானருச்சைபேதியாறுமதிமூழ்கினாளும் … … … … … … (௰)

வேறு

இன்முறுகுங்கடுங்கோடைப்பருவத்தைந்தழனுப்பணவிழைவினின்று
மூயிர்கவருங்கடுங்கூற்றினுயிர்செகுத்தகனைகழற்றுளுவந்துபூசித்
தயில்மழுவாட்படையானுக்கின்சுவைப்பாயசநிவேதித்தமைத்துமங்கள்
செயிரின்மறையோனேற்பவெளிநின்றுன்முகிழ்நிலவுத்திங்கள்வெய்ந்தோன் …… (௰௧)

மைந்தரொருமூவரையுந்தநயையொருவகிதையையுமறைவல்லாள
தந்தனிற்கெனவுரைத்துமறைந்தனன்விட்புலத்தில்வணர்த்தையல்பாசன்
புந்திமகிழ்வரங்கொடுதென்னூர்புகுந்தான்பூசுரனும்புக்கபின்னர்ப்
பைந்தளிர்மெய்ச்சிறுவனையுஞ்சிறுவியையும்புவியியப்பப்படைத்தான்மன்னோ ... (௧௨)

மனங்கவர்புன்றலைச்சிறார்மூவருக்குமங்களநாயகன்பேர்சூட்டிப்
பொனக்கொடிக்குப்பொன்னேரப்பூங்குழலையென்றபிதாமம்புனைந்துசாத்திச்
சனம்புகழுவேதியனுவப்பினைவளர்த்துவன்பவளவிசம்பூத்தானமூறாக்
கனங்குழைவாணுதற்கருங்கட்பசுங்கோதைப்பொருவிறந்தகவின்மிக்காள் ... ... (௧௩)

தெரிந்திசைத்தகுலமலத்துமெதிர்போமிச்சிறந்தவளர்ந்தனளக்காலை
புரிந்துகிளர்புன்சடையெனவனைத்தருகூர்நின்றோருபார்ப்புருத்தோப்பப்
பெருந்தனைகான்மடிவோமெயியிலேசழுப்புமறையாறங்கமுற்றிப்
பரிந்துணர்த்தவருணமபடைத்துளவிப்பிரருகிப்பார்மேற்றோன்றி ... ... ... (௧௪)

முற்றவஞ்செய்தொழுகுலத்தோன்மனைபுகலும்வருகென்றுமுகமன்கூறி
கெற்றிவிழிகரங்கொணையநகிருத்தியுளந்தவுகைசீத்தம்பொங்க
மற்றுகினிலாதேயும்மகவெமணம்புரிதல்வேண்டுமென்றான்
வெற்றிமழவிடைப்பாகனவ்வணமாகெனவிதியாக்கேட்டோனன்றே ... ... ...(௧௫)

வேறு

கன்னற்சுவைபுளிப்பக்கனிதுவர்ப்பச்சிலமிழற்று
மன்னப்பெடைநடையாளுடனயின்மூத்தலைப்படையான்
பொன்னிற்பொலியணையுஞ்சலிவர்தானசைபோழ்தின்
மின்னிற்கடிதகல்வாயிருவிசும்பூற்றமறைந்தான் ... ... ... ... ... ... ... ... (௧௬)

புடைகின்றவர்காணுநமெரங்கசர்புலன்மயங்கி
மடல்விண்டவரிபூந்தாரணிமாமாறுமருங்கடா
னுடைவென்றியையழுவத்தொளிமவிழுய்த்தலமொத்தான்
படர்துன்பொடிகளிசேடிகளையர்த்தான்பதைபதைந்தான் ... ... ... ... ... (௧௭)

அனையோனிலையுணராவுனர்வகைாதுவளர்வாறு
னனைவார்குழலிழையாளொடுமையான்மிசைதோன்றி
யினையாதொழிகவையோய்மணமியற்றும்பெருந்தவத்தால்
வினைகோதையையிவணெய்துபுமணஞ்செய்தனன்மகிழ்ந்தே ... ... ... ... ... (௧௮)

நின்றன்குலத்துள்ளோரனைவருநீயொருகேண்டி
யென்றுந்தரித்தெழுத்தைத்துணர்பவராக்குநமக்கு
நன்றுந்தரிசனநல்கநலஞ்சேவிவளோடு
மொன்றுஞ்சடாரிலிங்கத்திருவாயிங்கருறைவோம் ... ... ... ... ... ... ... (௰௯)

வேறு

இந்நிலவரப்பினம்பெயர்கலியாணேசனென்னவுமளிவீழ்
சுரிகுழலணங்கின்பெயர்கலியாணசுந்தரியென்னவுநிகழப்
பெருவிற்சிறைமேயப்பதிகலியாணபுரமெனநற்றலைமுகவென்றறைந்தான்
கருமிடற்றரவுந்தவிழ்முடிமேருக்கங்கண்ணியுமிலர்தவார்சடையோன் ... ... ... (௨௰)

சிறவிறிப்பெருங்கைக்களிற்றுரிபோர்த்தசெம்மலைநோக்கினான்மறையோ
னெறழ்வலிப்பருவாய்மடங்கலேறடர்த்தோரிருபிறப்பாளரியாவர்களு
நெறிபயில்விவாகத்திரண்டாநாளிழ்த்துவர்சேடவோமந்தேர்ந்
தறிவரும்பொருளைமீயுமந்தொழிலினடாற்றுதல்வேண்டுமென்றிரந்தான் ... (௨௧)

அல்லுறழ்கண்டத்தண்டர்நாயகனுமன்னதற்கிசைந்தவனன்றடவு
செல்லுலாம்புரிசைசூழ்மிக்கர்க்குத்தென்றிசைமருங்கிலோர்குரோசத்
தெல்லையினடைந்தமற்றதுமுடிந்தபின்றுகேழியபொருளுமெய்திச்
சொல்லருஞ்சுருதிவழியினக்கருமமிரட்பினல்குழ்ந்தவர்வியப்ப ... ... ... ... (௨௨)

அந்நலங்கவோசனுபுவகளிப்போனங்கொரியம்புரிதவிஞை
விந்நலந்திபனுமெனச்சிறந்திலங்கொளிபிலிங்கமொன்றுதித்து
மெய்த்தமர்விழைந்துனைதொழவச்சிவிச்சரமெனவிளங்குவது
தொத்தலாலங்கற்குழல்கயிலாயசுந்தரியெனமருங்கமர்வாள் ... ... ... ... ... (௨௩)

அருவமாயுருவாயருவுருவாகியல்லதுவாயுயிர்க்குயிராய்ப்
பொருவிகந்துயர்ந்தகடவுள்பொன்னேருபூண்முலைமடந்தையோடிங்ஙன்
றிருவிளையாடல்புரிந்தனன்மிண்டிதிருந்தநீர்மங்கலபுரியிற்
கருதருமிலிங்கமூர்த்தியுட்கரந்தான்கண்ணுதனிலையையார்தெரிப்பார் ... ... ... (௨௪)

வடவரைகுழையப்புயங்கநாண்கொளுவிமருந்துழாயம்புதொட்டிகலூர்
படரெரிதவழக்குறுநகைமுகிழ்த்துபவலயந்தனைனுவப்பக்
கடல்விளைபமிழ்திற்கனிந்ததீங்கிளவிக்கன்னியையவழங்கலான்மேம்பட்
டிடமகல்புவியிற்கருதிதேர்மறையோரெவரினுஞ்சிறந்தளோரானர் ... ... ... (௨௫)

ஒன்பதாவது மணம்புரிந்தவத்தியாய முற்றிற்று

ஆக அத்தியாயம் கூ-க்கு விருத்தம் ௩௱௫ள

## பத்தாவது பிருகுசாபந்தீர்த்தவத்தியாயம்

உழுந்தமிழ்ந்தளவின்வாரிதிமுற்றுமோர்குடங்கையினடங்கநுகர்ந்த
செழுந்தவன்குட்புலந்தனிநாக்குந்திம்புனற்கடசன்மைந்தனைநோக்கி
யெழுந்தழன்றமுனித்துருவாசனிட்டசாபமெளிதிற்கெடுமாறிங்
கழுந்துமம்மரகலப்புகல்வாமென்றமிழ்திறுமினியவாகாவின்ருன் ... ... ... ... (௧)

கரிமருப்புமகிலுந்திரைசிந்துங்காவிரிக்கடவுள்யாற்றின்வலப்பாற்
றெரிவரும்பெருமையானுபர்வையைத்தென்கரைத்தலையின்மஞ்ஞைகளாட்
வரியளித்தொகுதிபண்பயில்சோலைமாடுநீடுமதரைப்பெருவைப்பிற்
றிருமையோசனையில்யாமியதிக்கிலெவரும்புகழ்திருச்சுழிதோன்றும் ... ... ... ... (௨)

சிந்துதீர்த்தமுடனன்னதன்கீழ்பாற்செலவில்யோசனையோர்நான்களவின்கட்
சந்தநாடவிவரைப்பினில்வேலைச்சங்கினந்தவழுமுத்தரகோசத்
திருவாழ்முடியன்மங்களநாதனெம்பிரானுறைவன்மன்றமனைத்தின்
முத்துமதிமணிமன்றுளதாங்கண்மொழிகுவன்பரமபாவநமன்றே ... ... ... ... (௩)

என்றுபின்வருணன்வாழ்வதநம்பார்த்தேர்தகொட்டடுசினச்சனிமுகி
னின்றநின்றன்மகற்கொடுபோகிநீயுமத்தலமணைந்திணைதோன்று
மன்றனுறுபுனலக்கினிதீர்த்தமரபின்மூழ்குவிபடிந்த
தன்றீரத்தன்றுசேர்தலுமுடங்குகைநால்வாயாம்பலின்வடிவுநீங்குதறிண்ணம் ... (௪)

காலனார்பெருமைமாட்டியசீர்மார்க்கண்டரங்குவதிவாரவர்முற்சென்
றூலுமன்பொடுவணங்கிநின்மைந்தற்கைந்தெழுத்துமநுகல்குவிபின்னர்
ஞாலமுய்யவடநீழலின்வைகுநம்பர்சந்நிதியினன்னியமத்தோ
டேலுமாறுசிவபாவனைமாறுதிந்தியப்பகைபொரமலடர்த்து ... ... ... ... (௫)

ஆறிலக்கமுருவம்மநுவோதினக்கணத்தினசனுந்தொடர்சாப
மேறுயர்த்தகொடியண்ணல்வெளிப்பட்டுவனல்வரமதற்பின்வளைத்தோட்
சேரடிக்கௌரிகோனருள்செய்யதீர்த்தமொன்றவணியற்றுவையீண்டன்
கூறுகிற்றதிறனிலையுறன்மெய்யேகொட்சுருநடவுவோய்படர்கென்ருன் ... ... (௬)

வேறு

மலயவெற்புறைகுறுமுகியுணர்த்தவாய்மொழிகேட்
டலைசுருட்டெழுந்நீர்க்கடற்கதிபதிமகனே
லேமுகப்படாதுருப்படுமுத்தலையயில்வேற்
றலைவனுத்தரகோசமங்கைப்பதிசார்ந்தான் ... ... ... ... ... ... ... ... ... ... (எ)

கொடியதீவினைச்சுறும்பெறியக்கிநிதீர்த்தம்
படியவுய்த்தனன்புதல்வனைமரபினிற்படிந்து
நெடியவான்சனையேறலும்பிருகுவந்நிலையே
யடிபெயர்க்குமால்வனாயுருநீங்கினனம்மா ... ... ... ... ... ... ... ... ... ... (அ)

மழையதன்வடிவெய்தினன்பரமனைந்தெழுந்தும்
விழைவறுத்துயர்மார்க்கண்டன்விதிவழிவிளம்பக்
குழையுநெஞ்சொடுகேட்டவன்பணிதலைக்கொண்டு
தழைவிரிக்குமாணிழலுறையிறைவன்சந்நிதியில் ... ... ... ... ... ... ... ... ... (கூ)

உருவுமூவிரண்டிலக்கமோதலுமுலகின்ற
செருகுபூங்குழற்பசுங்கொடியோர்புடைதிகழ்
முருகுபாய்சடைமுன்றிலின்முளைகிலாத்தவழ்
விருகணோர்ந்துமுக்கண்களுந்திருமுகத்திலங்க ... ... ... ... ... ... ... ... ... (ம)

பொரிமலர்ந்தன்பொறியுழையேந்தியபுநிதன்
பெரிதுவந்தெளிவந்துநின்றனன்பிருகுவின்முன்
னுருகுகாதலோய்முத்தனுயினையெனவுணப்பப்
பருகுமின்னமுதென்னவாய்மொழிசெவிப்படலும் ... ... ... ... ... ... ... (மக)

மிக்கெழுந்தபெருவகையின்மெய்ம்மயிர்சிலிர்ப்ப
நெக்கசிந்தையினெடுங்கணீரருவிவார்ந்தொழுகத்
தொக்கநான்மறைத்துதிகளாற்புராணநூற்றுதியாற்
செக்கர்மேனியம்பழிச்சுபுசெய்யதாள்பணிந்தான் ... ... ... ... ... ... ... ... (மஉ)

வேறு

வாருணிவேட்டன்வரங்கள்யாவையு
மேருவிற்பிடித்தகைவிமலனீதலும்
ஆரணமுணர்முனியகமகிழ்ந்தனன்
காரடர்மிடற்றினன்கரந்துவைகினன் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (மங)

வரம்பெறுபிருகுவைவ ருணனன்புகூர்ந்
தரம்புதைபடத்தழீஇயுவந்துமைந்தநீ
யரந்தைதீர்ந்தனையருளாக்கமெய்தினை
நிரந்தரமுத்தனாய்நீடுவாழ்தியால் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௰௪)

பிறந்துளபெரும்பயன்பெற்றபேர்க்கெலாம்
சிறந்துளவுனைநிகர்செல்வர்யாவரே
துறந்தவர்தொழுதெழுதூயதோன்றநீ
யறந்தழையித்தலத்தமர்தியென்றனன் ... ... ... ... ... ... ... ... ... ... (௰௫)

வேறு

அத்தலத்தினில்வருணதீர்த்தமென்றற்புதத்தொருதடமதன்
மெத்தமேல்கரையிற்சிவக்குறிவித்திவில்வதளங்கொடு
பத்தியாய்நியமத்தோடர்ச்சனைபண்ணிமும்மதிவைகினை
னித்தையோர்மிருகண்டுபுத்திரனெய்தினன்பிருகுவினிடை ... ... ... ... ... (௰௬)

அழிவிலாமுநிபுங்கவன்றனதடிபணிந்தெழுபிருகுவுக்
கிழிவிலாதுயர்கூவிளத்தளமெத்தலத்தினுமித்தலத்
தொழிவிலாப்பலனென்றனந்தமுடைத்ததெனப்பினுமோதுவான்
விழியிலாதடர்கூற்றுதைத்துவிளங்குசேவடிமிசையிடின் ... ... ... ... ... ... (௰௭)

புண்ணியப்புன்னமூழ்கிநீறுபுனைந்துமந்திரமூலநா
வுண்ணிகழ்ந்திடமூன்றொடைந்தொடேழொன்பதோடுபன்னொன்றெனு
வெண்ணிநிம்பிரதக்கிணத்துளியன்றவொன்றுசெய்தஞ்சலித்
தண்ணல்வில்வமரத்தினேறியமர்ந்துபைந்தழைகொய்தலே ... ... ... ... ... (௰௮)

கொய்தவில்வதளங்கொடிச்சிவகோசமூர்த்தியையர்ச்சனை
செய்தல்காலமெலாமுமாமுயர்தெரிசமுற்படுபூரணை
யெய்துமிந்துவின்வாரமேவிதிபாதமேயுபராகமே
மைதனமாதமதாதியாயமதிப்பிறப்பொடுசிவனிரா ... ... ... ... ... ... ... (௰௯)

சிறந்தபுண்ணியகாலமற்றையவற்றினுந்திரிசென்மநாட்
பிறந்தநாளனுசென்மநாளிவையிற்றினும்பெரியோருளத்
துறைந்தகோனிருதாளினுய்த்திடினென்றுகோடிகுணத்ததா
மறைந்தபைந்தளிர்வில்வகல்குமரும்பெறற்சிவஞானமும் ... ... ... ... ... ... (௨௰)

தற்பயந்தவராவிதீர்திவசத்தின்வில்வதளங்கொடு
சிற்பரன்குரைகழலினர்ச்சனைசெய்யின்மற்றவர்கிரயகீத்
தற்புதன்சிவபுரியினெய்துவரககணைத்ததனடிநிழன்
முறைபெறுங்குரவர்க்குநூலவழிமுறைசெய்பிண்டம்வழங்கினால் ... ... ... ... (௨௧)

இன்னவிழ்த்தொகைவருடமீன்றவெம்பிரானுலசத்திடை
மன்னியாள்வர்தலங்களெங்கணுமறுவில்கூவிளபத்திரம்
தன்னிகர்த்தவன்மலரடித்துணைசாத்த
றன்னினுமிப்பதியிற்கணிப்பிலபலனதிகரும்விசேடமாய் ... ... ... ... ... ... (௨௨)

அலைதிரைக்கடல்சூழ்தனந்தலையவநிமேற்சிவபுரிசனாட்
டலைமைபெற்றதிந்நகரமென்றுதபோதனன்புகல்கிற்றனன்
கொலைவலிச்சுறவூர்தியோனருள்குறிசின்பரமுனிசொற்படி
இலைகுழைத்தொழுவில்வமங்கைசொடோரைதாள்வழிபட்டனன் ... ... ... ... (௨௩)

இருள்கெடுத்தெறிசுடர்நிசர்ப்பனவிரவியொப்பனபுரவியே
ழுருள்பிணித்தெழுபரிதிவெட்குவவொளியருமணிபற்பல
திருமுனின்றெறிதீபமாகெனநல்கினன்சிவனருள்பெறுப்
பிருகுவிண்புகழ்தாதையோடுபெயர்ந்துதன்னாலயெய்தினான் ... ... ... ... ... (௨௪)

பத்தாவது பிருகுசாபநீங்கின அத்தியாயம் முற்றிற்று
ஆக அத்தியாயம் ௰ க்கு விருத்தம் ௨௱அ௰க

## பதினோராவது வலைவீசுமத்தியாயம்

இன்னுமோர்கதையிசைப்பனத்தலத்
தன்னமென்னடையம்பிகைக்குமுன்
மின்னுவெண்பிறைமிலைந்தவார்சடைச்
சென்னியானுபதேசஞ்செய்தனன் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௧)

அந்தவேலையிலளியுருக்கொடு
சந்தவெம்முலைத்தையலோதிவாய்க்
கந்தன்வைகுபுகங்கைசூடிய
மைந்தனோதுமம்மநுவுணர்ந்தனன் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௨)

அதனையோர்ந்தவம்மன்னனல்வெள்ளிவேற்
சுதனைநோக்குபுதோன்றலீங்கிவள்

புதையிருட்குழற்புறத்தொளித்திரா
முதவுமந்திரமுணருபிற்றலால் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௩)

மகரமீநமாய்மறிதிரைக்கடற்
புகுதியென்றுபின்புனைபைங்கோதையை
நிகரில்கற்பினாய்நின்னுபேட்சையாற்
குகனிருந்தனன்குழைமென்கூந்தலின் ... ... ... ... ... ... ... ... ... ... ... (௪)

ஆதலாலினிநீயுமார்கலிச்
சீதவாரியிற்சிறியவாலையாய்ப்
போதலசெய்கெனப்புகைந்தியாவர்க்குந்
தாதையன்னவன்சபித்தனன்னசோ ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௫)

இடுகுநுண்ணிடையேழையஞ்சின
ளடுநடுங்கினளடலைகூர்ந்தனள்
புடையகன்றபல்புவநநாயக
கடையிகந்தவான்கருணைவெள்ளமே ... ... ... ... ... ... ... ... ... ... (௬)

அருளிலாதவர்க்கபயநல்குவோய்
பெருமயாம்புரிபிழைபொறுத்திநீ
கருதருங்கடுஞ்சாபநீங்குமா
றிருவர்நேடுவோயியம்பல்வேண்டுமால் ... ... ... ... ... ... ... ... ... ... ... (௭)

எனவிரத்தலுமெம்பிரான்சொலும்
புனைநறுங்குழல்புணரிசேர்தலும்
வலைகொடுந்திமில்வாணனேவலால்
வினைவல்சாலகர்வீசுவார்வலை ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௮)

அவ்வலைத்தலையடையுநிற்கொடு
பவ்வநீர்த்துறைபாதுகாத்தரு
ளெவ்வமில்லவனிற்சென்றில்லொடு
மைவரிக்கணாய்மகளினோம்புநாள் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௯)

ஆங்குநாமடைந்தறுமுகத்தவன்
றுங்குகோட்டுமீன்றநுவித்துநின்
வாங்குவெள்வளைமலர்க்கைபற்றுதி
மேங்கன்மின்னென்றனெங்குநின்றுளான் ... ... ... ... ... ... ... ... ... ... (௰)

வேறு

ஞாலமீன்றகன்னிபின்
சூலபாணிசொற்படி
சாலவுஞ்சிறியளாய்
வேலையூடயர்ந்தனள் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௯௧)

புள்ளினம்புறவுரு
முள்ளிலையயிற்படை
வள்ளல்கோட்சுறவமாய்
வெள்ளநீரின்மேயினான் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௯௨)

நெய்தல்வேந்தனோர்பகற்
செய்திவல்லநுழையரோ
டெய்தினானெடுங்கடற்
கைதைநாறுகரையின்வாய் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௯௩)

வலைஞர்வீசுசேக்கையிற்
புலவுமீன்குழாத்தொடுந்
திலகவாணுதற்பசுங்
கலவமஞ்ஞைகண்டனர் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௯௪)

விம்மிதமனத்தராய்க்
கொம்மெனக்கொணர்ந்துபோ
யம்மென்சாயலரிவையைத்
தம்மிறைக்குநல்கினார் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௯௫)

இன்னிசைச்சுரும்புவீழ்
புன்னையந்தெரியலான்
கண்ணிரம்புகாரிகைப்
பெண்ணணங்கைநோக்கினான் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௯௬)

எம்பெருந்தவத்தினிற்
கொம்பைமீண்டளித்தன
ரும்பரோயென்றுள்கினா
னம்புராசிகாவலன் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௯௭)

களித்தனன்வியந்தனன்
கிளிச்சொல்வல்லியைக்கொடு
பளிக்குமாடமேற்பிறை
யொளிக்குமில்லநண்ணினன் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௧௮)

முனிவிவந்தவாறுரைத்
தனையநவ்விநோக்கியை
மனைவிகைக்கொடுத்துயிர்த்
தநயையாய்வளர்த்தனன் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௧௯)

நாளுநாளுநலமிக
வாளுண்கண்ணிமலர்தரு
மாளியன்னமொய்ம்புடைட்
மீளிபார்த்தியம்புவான் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௨௰)

கோவைவெள்குதுவரிதழ்ப்
பாவைநங்குலக்கொடி
யாவர்திண்புயவரை
மேவுதற்குரியளோ ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௨௧)

திருவினுக்கொர்திருவனாள்
பெருவனப்பினுக்கிசை
யுருவமிக்ககாளைய
ரிருநிலத்திலுளர்கொலோ ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௨௨

தன்னிகர்த்தகாதலர்
கந்நியர்க்கிலரெனிற்
பின்னரின்னலீட்டுவர்
முன்னரின்றவர்க்கநேர ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௨௩)

என்றுசிந்தையாகுலத்
தொன்றவோர்ந்திருந்தனன்
மன்றல்விம்முபோதணி
குன்றுபோலுமார்பினன் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௨௪)

சுறவுருவெடுத்தவவ்
விறைமகன்செருக்குமிக்

கனைகுரற்சலதியு
மறுகியுட்கரிந்துமே ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (உ௫)

திமிங்கிலகிலாதியா
யிமிர்ந்தபுன்மயிலையுந்
தமங்கணோர்தலமர
கிமிர்ந்துவால்புடைக்குமே ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (உ௬)

விடுகணைபிறழிடக்
கடிதிரேறும்வங்கமும்
படவுதோணியென்னவுந்
தடவுகோட்டினேற்றுமே ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (உ௭)

பரவுநோல்வளத்தநட்
ஞரவுவாருதிப்படா
விரவுசீர்வணிகரும்
வரவுபோக்குமாறினர் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (உ௮)

வேறு

எற்றுமின்செய்வன்மையு மிருங்கரந்தரும்பொரு
ளாற்றுமாக்கள்கவ்வைபுமறிந்தவையகற்றவன்
வேற்றுநாடுமீப்புகல்விக்கிரமாக்கருளான்
போற்றுமங்களன்னைதன்புதல்விபாகனோற்றவன் ... ... ... ... ... ... ... (உ௯)

முன்னிகாமருப்புடைமுழுவலிச்சுறவினைத்
திண்ணிமைவெளிப்படச்செகுப்பரியாரவர்க்கியா
மொன்றுநற்குறுந்தொடிபொருமகட்கொடுப்பன்மற்
றன்னன்மீனறத்தினுண்மையிதுபிழைப்பதன்றரோ ... ... ... ... ... ... ... (௩௰)

என்றருளிசைத்தனனிசைத்ததென்றிசைக்கணுஞ்
சென்றதிவ்வுலகில்வாழ்திருந்துவார்கலியகத்
துன்றுவாருமரியதந்தொழிலின்மேன்மைநீத்தனர்
வென்றிவேட்டனுலைவிலக்கவல்லரேவரே ... ... ... ... ... ... ... ... ... (௩௧)

குயிற்குலங்கவர்ந்தசொற்கொடுங்குழையணங்கொடு
வெயிற்கலனிலங்குதோள்விசாகனெய்துசாபமும்

பெயர்த்தல்வேண்டியெம்பிரான்பெருந்தவர்தமக்கொடு
மயிர்கணன்னபன்முடிவலையுமொன்றுதாங்கினான் ... ... ... ... ... ... ... (௩௨)

மறுகுவாரிசெழியவோடுமெதலைமாக்கண்மன்னனைக்
குறுகவந்துசுறவின்வல்லதின்றுகொல்வல்கொன்றபி
னிறுநுசுப்பின்மங்கையையெமக்குநல்குசென்னலு
மறுதிசெய்துசலவர்கோனுமங்ஙனாகுகென்றனன் ... ... ... ... ... ... ... ... (௩௩)

வேறு

அவ்வரசனிகழ்ந்ததற்பினலைசுருட்டுமொலியாழியடைந்துமூவர்ச்
சைவமுதனெடுங்கயிற்றுக்குறுங்கண்வலைதனையெறிந்துதறுகண்மீன
மொய்வலைப்பட்டமையுணர்ந்துசுருக்கிமுருகனையனையமூர்த்திகோத்தான்
செய்வதொன்றுமைந்துதொழிலுடையோற்குமிதுபுகழோதெரியுங்காலே ... (௩௪)

அஞ்சுவருசெலைமகரமடர்த்தனமேயாமினிநீயமிழ்தத்தீஞ்சொல்
வஞ்சியைநீந்துணைத்தவுணாவழுவாமலோம்புகெனவள்ளல்கூறக்
கஞ்சமலர்க்கழிச்சேர்ப்பனன்னவற்கேகொடுப்பமுயல்காலைமாலைச்
சஞ்சரிகநிரைமுரலுமளகவாணுதற்பிடியுந்தாயுங்கேட்டார் ... ... ... ... ... ... (௩௫)

ஐயமிரந்துண்ணிரப்புமிரவாளியிவனிவன்பாலடைதலொல்லேம்
வெய்யவிடமிசைதுமெனவிருவருநஞ்சயின்றுயிர்விடுத்தாராங்குப்
பொய்யிகந்தமெய்ம்மொழியோனத்திறங்கண்டனனெண்டோட்பொருப்பைநோக்கிச்
செய்யதளிரடிச்சிறுமிவேற்றுடம்பாயினள்யானென்செய்வதென்றான் ... ... (௩௬)

தெருமருசிந்தனையொழிதியுயிர்தணந்தாளென்னினுமத்திருவையூழிற்
றருதல்புரிகெனவுரைப்பத்தாபதவேடக்கடவுள்சங்கமார்க்கும்
பெருகுபுகற்றண்டுறைவனன்றுநன்றென்றுளத்துவகைபெருகாநிற்பக்
கருநிறவாள்விழிக்கொடியைக்கோடியெனவுதகத்தாற்கரத்தினீந்தான் ... ... ... (௩௭)

முற்றுமுயிர்க்குயிராகிநிறைந்தபரன்முளரிமலர்த்தனையசெங்கை
பற்றுதலுந்துயிலுணர்ந்தாங்கெழுந்தனள்பூங்கரும்பெழுதும்பணைத்தோள்வல்லி
மற்றதுகாண்டலுமிறும்பூதடைந்தனன்மெய்ம்மயிர்பொடிப்பக்குளிர்ப்பவுள்ளங்
குற்றமில்வாய்மையினிறப்பமகிழ்ந்தமிர்தசாகரத்திற்குளித்ததோதத்தான் ... ... (௩௮)

வேறு

மத்தவாரணமுரித்து ரிபோர்த்தவானவனே
யித்தபோதகவடிவுகொண்டணைந்தனனென்று
முத்தலங்கன்மாவிகைபுனைமுழுவலிதெருண்டு
பைத்தபாம்பணிபதங்களில்வீழ்ந்தனன்பணிந்தான் ... ... ... ... ... ... ... (சுகூ)

தாமரைத்தடங்கண்சணீர்ததும்பிவார்தொழுகப்
பூமழுப்படைகரந்தவபொறியிலேனின்னைத்
தேமலர்ப்பொகுட்டிருந்தவன்செங்கண்மால்காணுத்
தூமறைத்தவர்துணிபொருளெனவுணர்ந்திலனல் ... ... ... ... ... ... ... ... (சம)

ஈதுகோற்றருண்மழவிடையுயர்த்தவவிமையோர்க்
காதிதேவமூவுலகநாயசவடிவணங்குங்
காதலன்பிஞேர்ச்சஞ்சலென்றெடுத்தைக்கமல
பூதவாகநவெனத்துதிசெய்தனன்புகல்வான் ... ... ... ... ... ... ... ... ... (சக)

எளியனேன்மனக்கிழத்தியுமுன்னமங்கிறந்தா
ளளிசெய்துய்யுமாறருள்செனவருட்கடலெங்கோ
னெளிகொடுஞ்சிலைப்புருவஞ்செந்நெறிப்பொடுநோக்கக்
கிளிமருட்டுதீங்கிளவியுமெழுந்தனளன்றே ... ... ... ... ... ... ... ... ... (சஉ)

பின்னரங்கர்துறந்தயல்போகியபெம்மான்
றன்னதுட்கொளாவெழுதலுஞ்சாவிசர்தலைவ
னென்னரும்பெறற்புதல்வியையெங்குலக்கொழுந்தைப்
பன்னுநான்முறைகடிமணம்புரிகெனப்பகர்ந்தான் ... ... ... ... ... ... ...... (சங)

ஊன்றுசிருடையிப்பதிக்குத்தரதிசையின்
மூன்றுகூப்பிடுவரைப்பினின்முடித்துமங்ஙனமென்
றூன்றகேள்வியோரகத்துறையின்னமுதனையான்
றேன்றுவற்றுதாரவனெடுமெவ்வுனழச்சென்றான் ... ... ... ... ... ... ... ... (சச)

அனவரதகலியாணனுண்டுமெணக்கோலங்கொண்
டினவனைக்கைமடமானையியல்புழிவேட்டனனம்பா
பனைதிரண்டதனதிண்டோட்பரதர்குழாஞ்சூழ்ந்துவப்ப
முனமுயன்றதவமேதோமொழிதம்யாமெனற்யாற்றே ... ... ... ... ... ... (சரு)

அன்னதலங்கலியாணமங்கலமென்றன்றுதொடுத்
தெங்கிலமுமெடுத்துரைப்பவிசைபோயதிதுவன்றி
மன்னுசனவம்பல்குழீஇவர்துவதிதலினாலும்
பன்னுபெயர்யூதிகாக்கிராமமெனவும்பகர்வார் ... ... ... ... ... ... ... ... ... (௪௬)

அலறுகுரற்பேருததியலையீர்க்கப்படுதலினாற்
றிலகநுதலுமைதிசைசேர்மடந்தையெனுந்திருநாம
மிலகுசுடர்வெயில்பரப்புமிணையிகந்தமெய்முழுது
நிலவுபொழிகீற்றழகனிகழ்த்தவடைந்தனண்மன்னோ ... ... ... ... ... ... ... (௪௭)

தோலடிச்செஞ்சூட்டன்னந்தோடவிழ்பங்கயப்பொகுட்டு
மேனுறைதெண்கழிக்கானல்வியனூடன்முகநோக்கி
நீலமிடற்றெம்பெருமானின்விளங்குரோடுகி
சாலவுயர்பயனிரண்டுஞ்சார்தியெனவரமீந்தான் ... ... ... ... ... ... ... ... (௪௮)

ஆங்கவர்கட்கைந்தெழுத்தமருன்செய்தவரிமுசாக்
கோங்கமுலைசுமந்தேசியுங்கொடிமருங்குற்றேவியுட்
னீங்கினன்மங்கலநாதனீங்காதத்தலனிலெழுந்
தோங்கியதோர்சிவலிங்கமொளிகிளர்திப்பியவடிவாய் ... ... ... ... ... ... ... (௪௯)

மற்றதன்பேர்கலியாணநாயகமாமருங்கசலாச்
சிற்றிடைப்பேரகலல்குற்செங்கனிவாய்வெண்மூரன்
முற்றிழைமுற்றுமழலைமொழியுமையாட்கபிதானம்
சொற்றனர்கள்கலியாணசுந்தரியென்றெல்லோரும் ... ... ... ... ... ... ... (௫௰)

கொண்டலினங்கண்படுப்பக்குளிர்திங்கண்முதகுறிஞ்சும்
விண்டொடுமாளிகைசூழ்ந்தவிக்கிரமவளநகரில்
வண்டுளர்பூந்தார்வாகுரோசற்குவடபாலிற்
றிண்டிறல்வெஞ்சுறவோடைசேணிடைத்தோற்றுவதென்றும் ... ... ... ... (௫௧)

வேறு

உத்தரகோசமங்கையொப்பிலிச்சரிதைசொன்னே
னத்தலைவதியுமத்திபறுதொழிலாளர்மேன்மை
பொய்த்துறைகடிந்தீர்கேண்மின்புகலரிதொருவராலு
மெய்த்தவாறுணர்க்கேன்கேட்கிலிடர்புரிவினைகளீக்கும் ... ... ... ... ... ... (௫௨)

அனைவருமன்றேனெற்றியழல்விழிபிறவுரித்த
முனைவனதருவேடாவர்முறையினுசாரமுய்ப்போர்
வினையறுசௌசமாதிகிரியையின்மிக்கோர்தோய்வர்
புனலின்முப்போதுஞ்செய்வர்பூசனைதிரிகாலத்தும் ... ... ... ... ... ... ... (௫௩)

முதுமறைமுறையினஞ்சமுற்றினேர்சமயமன்றுஞ்
சதுவிததீக்கையுள்ளோர்சைவநூலிருபத்தெட்டு
முதிர்தரவுணர்ந்துகற்றோருபாகமமவற்றினேதும்
விதிவழித்தொழிலும்வல்லோர்விழைபவர்சோமயாகம் ... ... ... ... ... ... ... (௫௪)

வயிச்சுவதேவசன்மமகிழ்ந்தயர்பவர்வழாம
லியற்றுமென்பாசனத்தரிலங்குசன்மணியிற்செய்த
வெயிற்செய்குண்டலமும்பல்வேறணிகளுமுடையோர்மாலை
யுயிர்த்தவெண்ணிலவுதோற்பவொளிர்திரிபுண்டரத்தர் ... ... ... ... ... ... ... (௫௫)

சந்தணிதிலகர்போதுசாத்தியகையர்மாசி
லந்துகிலுடையருழினமைபவித்திரகரத்தர்
சுந்தரமார்பிற்சூழ்ந்ததூநிறவுபவீதத்தர்
சிந்தனைதிரிதலில்லோர்தெற்றெனயாவுந்தேர்ந்தோர் ... ... ... ... ... ... ... (௫௬)

அன்னவர்க்காணிலன்றேயகத்திருளனைத்துங்கீழ்பான்
முன்னுசெங்கதிரோன்கண்டமுனிகுறும்பனியினீங்கும்
பன்னருந்தானமெல்லாம்பகர்ந்தவர்க்கருகமீத
லுன்னுபாத்திரங்கண்மூன்றினுயர்ந்தபாத்திரமேயாவர் ... ... ... ... ... ...... (௫௭)

அணுவளாயதொன்றேனுமளித்திடினதுவுநூறு
குணமதிபலத்தைநல்குங்கொடுத்தவர்மகிழ்ச்சிகூறிற்
கணவிரங்குரவுபூழைகாந்தைபாசறுகுவந்தி
யிணரவிர்கொன்றைதும்பெதிரிலானுவக்குமன்றே ... ... ... ... ... ... ... (௫௮)

இப்பரிசாங்கணன்றிபெத்தலத்தினுமற்றில்லைச்
செப்பிலன்னவர்பாலென்றுஞ்சிவகதைவினவல்வேண்டு
மெய்ப்பொருட்காதைகேட்போர்வினவுவோருவக்குமாறு
கைப்பொலிந்தவிர்பொன்னூழிகனங்குழைநுழைநாற்றுனே ... ... ... ... ... (௫௯)

கொத்தவிழ்நறுந்தார்மாலைகுளிர்வரைச்சாந்தஞ்சாத்தி
யத்தகுதவிசிலேற்றியாய்மலர்கரத்திலேந்தி
நித்தனைவழிபட்டோன்னென்றியினர்ச்சித்துமாறுப்
பத்தியானித்தியமீவோர்பயன்றலைப்படுவரன்றே ... ... ... ... ... ... ... ... (கூ0)

ஒருமுதலுவப்பின்வைகுமுத்தரகோசமங்கை
யரிதுணர்சுருதிநூன்முற்றளந்தவர்க்கறியலாகுந்
தெரிவரிதன்றியார்க்குந்திருந்தியவொழுக்கினின்ற
பொருவிலீர்நும்பாலன்பாய்ப்புகன்றனமிப்புராணம் ... ... ... ... ... ... ... (கூக)

இருதலைச்சிரந்தன்னோர்கையேந்துவோனடிக்கீழ்வேட்கை
பெருகியாத்திகராய்வாழும்பெருந்தகையவர்கட்கல்லா
லுரியதன்னிலையினில்லாதொழுகுபுன்பதிதரோடும்
பரிவினாத்திகர்பல்பேதப்பாசண்டர்க்குரைக்கொணாதால் ... ... ... ... ... ... (கூஉ)

காதலிற்கனிந்துசொல்வோர்கருத்தொடுவினவுவோர்க
ளாதரித்தெழுதுகிற்போரருவினைமுழுதநீத்து
மேதகுசெல்வங்கல்வியன்புகழாயுளீட்ட
மேதமில்புதல்வர்ப்பேறுமெய்துவரிடர்நோய்தீர்வர் ... ... ... ... ... ... ... (கூங)

தரியலர்ச்செகுத்துநாளுந்தன்கிளைதழைத்துநீட
விரிதலைநிலத்தின்வாழ்வர்மெய்ம்மையேயிம்மையம்மை
வரிநெடுங்கண்ணிபங்கன்வளர்புரத்தடைந்துவீறு
புரிசிவகணங்களோடும்பொலிந்துநித்தியராய்வாழ்வார் ... ... ... ... ... ... (கூச)

பதினோர்வது வலைவீசுமத்தியாயம்
முற்றிற்று

ஆக அத்தியாயம் பதினொன்றிற்குத் திருவிருத்தம் . சாசரு.

திருவுத்தரகோசமங்கைப்புராணம்

முற்றிற்று.



